# தீக்கதிர்

ஆசிரியர்: எம். என். ராவுண்ணி

8 பக்கங்கள்
★
விலை 15 காசு

கதிர் 2 | சனிக்கிழமை | 11-7-1964 | விலை 15 காசு | பொறி 3


# மகத்தான தெனாலி கன்வென்ஷன்

## இந்திய கம்யூனிஸ்ட் இயக்க வரலாற்றின் புதிய அத்தியாயம்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் அகில இந்திய கன்வென்ஷன் ஆந்திர ராஜ்ஜியத்தில் உள்ள தெனாலி நகரில் 7-7-64ம் தேதி ஆரம்பமாகியது. கன்வென்ஷன் போலீஸ் அடக்குமுறைக்கு ஆளாகி சுட்டுக்கொல்லப்பட்ட வீரர் கோட்டீஸ்வரராவ் நினைவரங்கில் துவங்கியது.

தெனாலி நகரம் முழுவதும் செவ்வண்ண தோரணங்கள் நகரை அழகுபடுத்திக்கொண்டிருந்தன. விஜயவாடாவில் நடப்பதாக இருந்த கன்வென்ஷன் தெனாலிக்கு மாற்றப்பட்டதால் "ஆந்திர ராஜ்ய மாநில இணைப்புக் குழு" அவசரமாக ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டியிருந்தன. மாநில வாரியாக தோழர்கள் தங்க தனித்தனியே ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

வங்கத்திலிருந்து தோழர்கள் ஜோதிபாசு, முஸாபர் அகமது, பிரமோத்தாஸ் குப்தா, ஹரிகிருஷ்ணகோனார் முதலியவர்களும்; அஸ்ஸாமிலிருந்து பிரேன் மிஸ்ரா; பஞ்சாபிலிருந்து ஜக்ஜீத்சிங் லயால்புரி, சுர்ஜித் முதலியவர்களும்; குஜராத்திலிருந்து சிமன்மேத்தா முதலியவர்களும்; பம்பாயிலிருந்து அகல்யா ரங்கனேகர் (தோழர் பி.டி. ரணதிவேயின் தங்கை) கோல்காட்கர் முதலியவர்களும், கேரளாவிலிருந்து தோழர்கள் ஏ. கே. கோபாலன், சுசீலா கோபாலன், சி. எச். கணாரன், ஏ. வி. குஞ்சம்பு, அழிக்கோடு ராகவன் முதலிய தோழர்களும்; டெல்லியிலிருந்து தோழர்கள் ராம்தாஸ், எம்.கே. பாந்தே தேஸ்ராஜ் முதலியவர்களும்; ஆந்திராவிலிருந்து தோழர்கள் பி. சுந்தரய்யா, அனுமந்தராவ், பிரசாதராவ், பசவபுன்னையா, நாகிரெட்டி முதலியவர்களும்; தமிழ் நாட்டிலிருந்து தோழர்கள் பி. ராமமூர்த்தி, எம். ஆர். வெங்கட்ராமன், என். சங்கரய்யா, ஏ. பாலசுப்ரமணியம், வி.பி. சிந்தன், ஆர். உமாநாத், எஸ். பாலவிநாயகம், கே. முத்தையா, கே. கஜபதி, கே. எஸ். பார்த்தசாரதி, கே. ரமணி, எல். அப்பு, ஆர். ராமராஜ், ராமசாமி (ராமநாதபுரம்), டி. கே. ராமானுஜம் (பாண்டிச்சேரி), கே. செல்லப்பன், கே. ஆர். ஞானசம்பந்தம், வடிவேல் ஆகியோருடன் மற்றொரு தோழரும் ஆக 19 தோழர்களும்; மைசூர் ராஜ்யத்திலிருந்து சூர்யநாராயண ராமராவ் முதலியவர்களும்; உத்தரப் பிரதேசத்திலிருந்து தோழர்கள் சிவகுமார், உபாத்யாயா, சங்கர தயாள்திவாரி முதலியவர்களும்; ராஜஸ்தானிலிருந்து மோகன் புனமியா முதலியவர்களும், மற்றும் காஷ்மீர், ஹிமாசலப் பிரதேசம், பீஹார், ஒரிஸ்ஸா, மத்தியப் பிரதேசம் உள்பட சகல மாநிலங்களில் இருந்தும் கட்சியின் மிக முக்கியமான தோழர்கள் வந்திருந்தனர்.

பிற்பகல் சரியாக 3-30 மணிக்கு 100 அடி உயரமுள்ள கம்பத்தில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்தாபகர்களில் ஒருவரும் வரலாற்றுச் சிறப்புமிக்க புரட்சிக்காரருமான பழம்பெருந் தோழர் முசாபர் அகமது அவர்கள் செங்கொடியை ஏற்றிவைத்தார். ஏராளமான தோழர்கள் கொடிக் கம்பத்தைச் சூழ்ந்து நின்று "கம்யூனிஸ்ட் கட்சி ஜிந்தாபாத்" "செங்கொடி ஜிந்தாபாத்" என்ற கோஷங்களை முழங்க, அதிர்வெடிகளின் பேரோசைகளுக்கிடையில் தோழர் முசாபர் அகமது கொடியேற்றிவைத்து இரண்டே இரண்டு வாக்கியங்களில் கொடியேற்று விழா உரையை முடித்தார்.

**"செங்கொடியை இன்று நாம் ஏற்றியதோடு நமது கட்சியின் வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தை துவக்குவோமாக! ஒரு உண்மையான பலம்பொருந்திய கம்யூனிஸ்ட் கட்சியைக் கட்டுவோமாக"**

பின் கன்வென்ஷன் துவங்கியது. அரங்கில் மார்க்ஸ், ஏங்கல்ஸ், லெனின், ஸ்டாலின் ஆகிய சர்வதேச கட்சித் தலைவர்கள் படங்கள் மாட்டப்பட்டிருந்தன.

தோழர்கள் ஜோதிபாசு, ஏ. கே. கோபாலன், சிவவர்மா (உ.பி.) ஆகியோரை தலைமைக் குழுவாக இருந்து கன்வென்ஷனை நடத்திக்கொடுக்க வேண்டுமென தோழர் சுந்தரய்யா பிரேரணை செய்தார். ஏகமனதாக கன்வென்ஷன் பிரதிநிதிகள் அங்கீகரிக்கும் வகையில் கரகோஷம் செய்தனர்.

மூன்று தோழர்களும் தலைமை பீடத்தில் அமர்ந்தனர். தோழர் சுந்தரய்யா அனைவரையும் வரவேற்றார். நிகழ்ச்சி நிரலையும் சமர்ப்பித்தார்.

இரண்டாம் நாள் (8-7-64) கூட்டத்தில் மைசூர், குஜராத், பஞ்சாப், ஹிமாசலப் பிரதேசம், ஜம்மு காஷ்மீர், டெல்லி, மகாராஷ்டிரம் முதலிய மாநிலங்களிலிருந்து வந்துள்ள தோழர்கள் தத் தம் மாநிலங்களில் திரிபுவாதக் கருத்துகளுக்கு எதிராக நடந்துவரும் போராட்டத்தைப்பற்றி விளக்கினார்கள். மற்ற மாநில பிரதிநிதிகள் அடுத்த தினங்களில் பேசுவார்கள்.

இந்தக் கன்வென்ஷன் கூட்டத்தில் விவாதிக்கப்படவிருக்கும் முக்கியமான தஸ்தாவேஜுகள்: இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் நகல் திட்டம், நகல் திட்டத்திற்கு ஒரு விளக்கக் குறிப்பு (இ. எம். எஸ். நம்பூதிரிபாட்) சர்வதேசிய சித்தாந்த நிலைமைகளைப் பற்றிய தீர்மானம் முதலியவைகள்.

இன்றைய கூட்டத்தில் கலந்து கொண்ட தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் அவர்கள் டாங்கே கோஷ்டியினருடன் நடத்திய பேச்சுவார்த்தைகள் பற்றி விளக்கினார். தொடர்ந்து விவாதம் நடைபெறும். ஞாயிற்றுக்கிழமை மாலையோடு கன்வென்ஷன் முடிவடைகிறது. அன்று மாலை ஒரு பெரும் ஊர்வலத்திற்கும், பொதுக்கூட்டத்திற்கும் பிரம்மாண்டமான தயாரிப்புகள் செய்யப்பட்டு வருகின்றன. குண்டூர் ஜில்லா முழுவதிலுமிருந்தும் ஆந்திராவின் இதர பாகங்களிலிருந்தும் ஆயிரமாயிரம் தோழர்களும் பொதுமக்களும் தெனாலியை நோக்கி வந்துகொண்டிருக்கிறார்கள்.

நமது விசேஷ நிருபர்.
கே. செல்லப்பன்.

## சென்னை, கோகலே ஹாலில்
## தோழர் ஏ. கே. ஜி. பேசுகிறார்



சென்னையில் 14-7-64 செவ்வாய் மாலை 6 மணிக்கு கட்சி உறுப்பினர்கள், ஆதரவாளர்கள் பேரவைக் கூட்டம் நடைபெறும். தோழர் ஏ. கே. கோபாலன் அவர்கள் 'தெனாலி கன்வென்ஷன்' பற்றி விளக்கவுரையாற்றுவார். நுழைவுக் கட்டணம் உண்டு.

கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை மாவட்ட
இணைப்புக் குழு.

★ கம்யூனிஸ்ட் வார ஏடு ★

# விலைவாசிக் குறைப்பு நடவடிக்கையா?

# நாட்டை நாசப்படுத்தும் நயவஞ்சகமா?

M.R. வெங்கட்ராமன்

உணவு விலைவாசிக் குறைப்புக்குத் திட்டவட்டமான நடவடிக்கைகள் எடுத்துவிட்டதாக சர்க்கார் பக்கத்திலிருந்து அறிக்கைகள் வந்தவண்ணமிருக்கின்றன. அண்மையில் கூடிய ராஜ்ய முதலமைச்சர்கள் மகாநாடு ஏராளமான விளம்பரம் பெற்றது. யாரும் சாதிக்க முடியாததை சாதிக்க முன்வந்து தைரியமாக நடவடிக்கையிலிறங்கிவிட்டார் என்று, மத்திய சர்க்கார் உணவமைச்சர் திரு. சி. சுப்ரமணியம் அவர்களுக்கு, பிரதமமந்திரி திரு. லால்பகதூர் சாஸ்திரி அவர்களிலிருந்து பிரதேச 'சோட்டா' காங்கிரஸ் தலைவர்வரை ஓயாது பாராட்டுரை வழங்கிவருகிறார்கள். உண்மையைக் கூறவேண்டுமென்றால், என்றுமிராதவாறு எல்லாப் பொருட்களின் விலைவாசிகளும் செங்குத்தாக உயர்ந்துள்ள ஒரு நிலையில், காங்கிரஸ் தலைவர்கள் தம்பட்டமடித்து வரும் நடவடிக்கைகள் மக்களுக்கு உருப்படியான நிவாரணம் அளிக்கப்போவதில்லை. எந்த நடவடிக்கைகள் மக்களுக்கு விலைவாசிக் குறைவை உறுதிப்படுத்துமோ அவற்றை நிராகரித்துவிட்டு, எந்தப் பெரிய புள்ளிகள் எந்தத் தவறான ஜனநாயக விரோதக்கொள்கையை கடைப்பிடித்து மக்கள் திண்டாடும்படியான நிலையை உருவாக்கியுள்ளார்களோ, அதே நபர்களையும் அதே கொள்கையையும் இன்னும் பிடிவாதமாக ஆதரித்துச்செயல்படும்போக்கிலேயே சர்க்கார் செல்ல விரும்புகிறது.

மந்திரிக்குத்தான் ஆலோசனை கொடுத்துள்ளதாகவும் கூறினார்.

அவ்வாறே ஜூன் மாத இறுதியில் முதலமைச்சர்கள் மகாநாடு டெல்லியில் கூடியதை நாடறியும். ஆனால் அம்மாநாடு கூடுவதற்கு சில நாட்களுக்கு முன்பே உணவமைச்சர் திரு. சி. சுப்ரமணியம் இந்தியா முழுவதும் உள்ள தானிய வியாபார முதலாளிகளின், ஸ்தாபனங்களின் பிரதிநிதிகள் கூட்டத்தை டெல்லியில் கூட்டினார். அக் கூட்டத்திற்கு வந்த மொத்த வியாபாரிகள் முன்வைத்த கோரிக்கைகளில் இரண்டு முக்கியமானவை. அவையாவன :—

(1) இரண்டு வருடங்களுக்கு முன்பு அரிசி மில்காரர்களிடமிருந்து சர்க்கார் நிர்ணயித்த விலைக்கு கட்டாயக் கொள்முதல் விதிக்கப்பட்டது அகற்றப்படவேண்டும்.

(2) ஒரு ராஜ்யத்திலிருந்து மற்றொரு ராஜ்யத்திற்கு உணவு தானியங்களை எடுத்துச் செல்வதற்கு விதித்துள்ள எல்லாத் தடைகளும் நீக்கப்படவேண்டும்.

இந்த இரு கோரிக்கைகளையும் உணவமைச்சர் ஏற்றுக்கொண்டாரென்பது குறிப்பிடத்தக்கது. முதலமைச்சர்கள் மகாநாட்டு முடிவுகளை உணவு தானிய மொத்த வியாபாரிகள் நாடெங்கும் வரவேற்றார்கள் என்பதில் என்ன ஆச்சரியம்?

கட்டாயக் கொள்முதல் அறிவிக்கப்பட்டிருந்தகட்டத்தில் சென்ற வருடம் தமிழ்நாட்டில் அரசாங்கம் கொள்முதல் செய்ய விரும்பிய குறிக்கோள் 1 லட்சம் டன்னாகும். ஆனால் 60,000 டன்களுக்குமேல் கொள்முதலாகவில்லை. இதற்கு முந்திய வருடத்தில் அதே குறிக்கோளுக்கு இதைவிடக் குறைவாகவே சர்க்கார் கொள்முதல் செய்ய முடிந்தது. இவையெல்லாம் காட்டுவது என்ன? நிலத்திமிங்கலங்களையும் கொள்ளை லாபமடிக்கும் மொத்த வியாபாரிகளையும் அடக்குவதற்கு பதிலாக அவர்கள் கேட்கும் சலுகைகளையெல்லாம் அளித்து, அவர்களது லாபக்கொள்ளையைக் கட்டுப்படுத்த மறுக்கும் போக்கையே காங்கிரஸ் சர்க்கார் அனுசரித்துவருகிறது. என்பதையே.

ஜூலை 4ம் தேதியிட்டு புவனேஸ்வரத்திலிருந்து வெளிவந்துள்ள ஒரு செய்தியை ''விலைவாசிக்கட்டுப்பாடுகள் வாபஸ் பெறப்பட்டன''. இஷ்டம்போல் யாரும் வியாபாரம் செய்யும் உரிமை'' விரும்பப்படுகிறது என்று ''ஹிந்து'' பத்திரிகை பெரிய தலைப்புகளுடன் பிரசுரித்திருக்கிறது. ஒரிஸ்ஸா ராஜ்யசர்க்கார் கண்ட்ரோல்கள் மூலம் உணவு விலைவாசிகளைக் கட்டுப்படுத்தும் முயற்சியில் தோல்வி கண்டு

காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்திற்கும் கொண்டு வந்து சோஷலிஸ லட்சியத்தைப்பற்றி பிரமாதமாகக் காங்கிரஸ் தலைவர்கள் பேசியது ஞாபகமிருக்குமல்லவா? திரு. சுப்ரமணியத்தின் இந்த 'அரிசி' மில்திட்டம் நமக்கு அதைத்தான் ஞாபகப்படுத்துகிறது. இது பற்றிய சில விவரங்களைக் கேளுங்கள், 2000 அரிசி மில்கள் 2 கோடி டன் 'அரிசியை அரைக்குமாம், நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் இதை நாம் காண்போமாம்! இப்போதிருக்கும் அரவை மெஷின்கள் மிகப் பழமையானவையாயிருப்பதால் மேலைய நாடுகளிலிருந்து இதற்குத் தக்க யந்திரங்களை சர்க்கார் வாங்கப் போகிறதாம். சீக்கிரம் இந்தியா முழுவதும் 6 யூனிட்டுகளைத் துவக்குவதற்காக இந்த யந்திரங்கள் வாங்க இத்தாலி, ஜெர்மனி, ஜப்பான் முதலிய நாடுகளுக்கு தூதுகோஷ்டி செல்ல இருக்கி தாம், எப்படி இருக்கிறது, விலைவாசிகளைக் குறைக்கும் திட்டம்!

சர்க்கார் கையில் ஸ்டாக்காக வைத்துக் கொள்ள' கொள்முதலைக்கைவிட்டுவிட்டபடியால், அமெரிக்காவிடமிருந்து பிச்சை வாங்குவது தான் உணவமைச்சர் தமது நாட்டிற்கு காட்டும் பாதை. எஸ். கே. பட்டீல் காலத்தில் அமெரிக்க இறக்குமதியாகப் பிரசித்தி பெற்ற பி. எல். 480 என்ற அமெரிக்க விதிப்படி அடுத்த 4 வருடத்திற்கு ஒரே

இதனால் நிலைமையில் அபிவிருத்தி ஏற்படுவதற்குப் பதிலாக, நெருக்கடி மேலும் நீடித்து விலைவாசிகள் மேலும் உயரும்படியான ஆபத்து நமது மக்களை இன்னும் எதிர்நோக்கி நிற்கிறது என்று எச்சரிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம், சமீபகால நிகழ்ச்சிகளையும் இப்போதுள்ள நிலவரத்தையும் சிறிது கவனித்தாலே இது நன்கு புலனாகும்.

### தானிய வியாபாரிகளின் விருப்பமே அமுலாக்கப்படுகிறது!

சென்ற ஜூன் மாதம் முதல் வாரத்தில் பார்லிமெண்ட் கூட்டம் முடிவடையும் தருவாயில் விலைவாசிகள் அதிகமாக உயர்ந்துகொண்டே போகின்றன என்று மத்திய நிதி அமைச்சர் திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி அபாயச் சங்கு ஊதினார். நாட்டின் ஒட்டுமொத்தப் பொருளாதாரமே இதனால் அடியோடு சீர்குலையும் ஆபத்து வந்துவிட்டது என்றார். உணவுதானிய மொத்த வியாபாரத்தை சர்க்காரே எடுத்து நடத்துவது அவசியம் என்றார். ஆனால் இதை அமுல்படுத்த ராஜ்ய சர்க்கார்களின் ஒத்துழைப்புத் தேவை என்றும், இதை முன்னிட்டு உணவு விலைவாசி உயர்வுப் பிரச்சினையை விவாதிக்க ராஜ்ய முதலமைச்சர்கள் மகாநாடு அவசரமாகக் கூட்டப்படவேண்டுமென்றும் பிரதம

விலைவாசிகளைக் கட்டுப்படுத்த இன்றியமையாத ஒரு முக்கிய நடவடிக்கையான, தானிய மொத்த வியாபாரத்தை அரசாங்கமே ஏற்று நடத்துவது என்பதும் முதலமைச்சர் மாநாட்டில், கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையாகிவிட்டது. அத்தகைய பொறுப்பை சர்க்கார் ஏற்பது எளிதல்லவென்றும் அதற்கு மிக விரிவான ஸ்தாபன ஏற்பாடுகள் தேவையென்றும் முன்கூட்டியே திரு. சி. சுப்ரமணியம் வெளியிட்டுக்கொண்டார். பிறகு மாநாட்டில் தனது ஆரம்ப உரையில், சர்க்கார் ஒரு வர்த்தக ஸ்தாபனத்தை நிறுவி இதர மொத்த வியாபாரிகளுடன் போட்டியிடும் என்று ஒரு யோசனை கூறினார். இதுவே பயனற்ற கண்துடைப்பு நடவடிக்கையாகும் என்று ஏற்கனவே '' தீக்கதிரில் '' குறிப்பிட்டிருந்தோம். ஆனால் இந்த யோசனையும்—சில ராஜ்ய அமைச்சர்களின் ஆட்சேபணைக்குப் பிறகு—கைவிடப்பட்டதென்று மாநாடு முடிவுகள் வெளியானபோது தெரிந்தது. திட்டம் இப்போது கவனிக்கப்பட்டு வருகிறதென்றும் அடுத்த அறுவடைக்குள். இது தயாராகக்கூடுமென்றும் இப்போது திரு. சி. சுப்ரமணியம் கூறிவருகிறார்.

கட்டாயக் கொள்முதலும் ஆந்திரா, தமிழ்நாடு போன்ற ராஜ்யங்களில் எடுக்கப்பட்டுவிட்டது.

விட்டது. ஜூன் 12ம் தேதி இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி, கட்டாக் நகரத்தில் கடுகு எண்ணை, பருப்பு, வெங்காயம், உருளைக்கிழங்கு, கத்தரிக்காய், முதலியவற்றின் விலைகளைக் கட்டுப்படுத்தியது. இதன்விளைவாக. மேலும் விலைவாசி உயர்வும் பொருள்தட்டுப்பாடும் ஏற்பட்டன. சர்க்கார் இன்று அந்த உத்தரவை வாபஸ் பெற்றுக்கொண்டுவிட்டது.'' என்று அந்தப் பத்திரிகை நிருபர் குதூகலத்துடன் எழுதியிருக்கிறார். ஆயினும், செய்தியின் இறுதியில் ''காய்கறி மார்க்கெட்டில் விலைவாசிகள் இன்னும் உயர்ந்துக்கொண்டு தானிருக்கின்றன'' என்றும் அவர் குறிப்பிட வேண்டியிருந்தது.

### கட்டுப்பாட்டை அமுல்படுத்த முடியாத காங்கிரஸ் ஆட்சி

முதலமைச்சர்கள் மாநாட்டுக்குப் பிறகு பொதுத்துறையில் அரிசி மில்களை சர்க்கார் நடத்தப் போவதாக திரு. சி. சுப்ரமணியம் பத்திரிகை நிருபர் மாநாட்டில் பிரகடனப் படுத்திக்கொண்டார்: ''தேசிய உடைமை என்ற என்ற கோஷத்தையே கேலிக்கூத்தாக்கும் முறையில் சென்ற வருடம் ஜெய்ப்பூர் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் ''அரிசி மில்களை தேச உடமையாக்குவோம்'' என்று தீர்மானம் போட்டு அதை புவனேஸ்வர்

படியாய் தானியம் வாங்காது போனாலும், ஒரு வருஷத்திற்கு தானியம் வாங்க உணவு இலாகா செயலாளர் திரு. சங்கர் அமெரிக்காவுக்குச் சென்று வியாபார பேரம்முடித்துக் கொண்டிருக்கிறாராம். இதன் மூலம் 4 லட்சம் டன் அரிசி இன்னும் சில மாதங்களில் சர்க்காருக்குக் கிடைக்கலாம்.

நடப்பு வருடத்தில் மொத்த உணவு தானிய உற்பத்தி நமது நாட்டில் 45 லட்சம் டன்கள் அதிகரித்திருக்கிறதென்றும் இதில் அரிசி உற்பத்தியின் அதிகரிப்பு மட்டும் 44 லட்சம் டன்கள் என்றும் உணவமைச்சர் சுப்ரமணியம் அவர்களே கூறுகிறார். அப்படியானால் இந்த அதிக தானியமெல்லாம் எங்கே ஓடி மறைந்தது. உற்பத்தி அதிகரித்தும் விலைவாசிகள் ஏறிக்கொண்டே போவதேன்? வளரும் பொருளாதாரத்தில் விலைகள் உயரும் என்ற முதலாளித்துவப் பொருளாதார நிபுணர்களின் பொய்யான கூற்றை வைத்துக் கொண்டு காங்கிரஸ் தலைவர்கள் எத்தனை நாட்களுக்கு வார்த்தை ஜாலங்களுடன் தங்களுடைய பொறுப்பைத் தட்டிக் கழித்து வரப்போகிறார்கள்!

எனவே- காங்கிரஸ் அரசாங்கம் விலைவாசிப் பிரச்சினையில் நடைமுறையில் அனுசரித்து வரும் கொள்கையின் சாராம்சம் என்ன? அரசாங்கம் உணவு

(7-ம் பக்கம் பார்க்க)

# காங்கிரஸ் கட்சியின் ஜனநாயக சோஷலிஸ வாரம்

காங்கிரஸ் தலைவர் திரு. காமராஜ் அவர்களது பிறந்த தினத்தை 'ஜனநாயக சோஷலிச வார'மாக தமிழ்நாடு காங்கிரஸ் கொண்டாடுகிறது. அவரது 62-வது பிறந்த தினத்தை யொட்டி இந்த கொள்கைப் பிரச்சாரம் செய்வதாகவும் இதற்கு பொதுமக்கள் அனைவரும் ஆதரவு தரவேண்டும் என்றும் கூறி பெரிய பெரிய மூவர்ண சுவரொட்டிகள் எங்கும் ஒட்டியிருக்கிறார்கள்.

பழம் தேசபக்தர் என்ற முறையில் திரு. காமராஜருக்கு நாமும் வாழ்த்துக் கூறுகிறோம்.

ஆனால் வாழ்த்துக் கூறுவது என்பது ஒன்று; இல்லாத ஒன்றை இருப்பதாகக் கூறி நாட்டை ஏமாற்றுவது என்பது வேறு! காங்கிரஸ் கட்சி ''ஜனநாயக சோஷலிஸம்'' பற்றி பேச முன்வந்திருப்பது உண்மையான ஆழ்ந்த கொள்கைப் பற்றிலிருந்து எழுந்த பிரதிபலிப்பா என்பதுதான் நமது கேள்வி. காங்கிரஸ் கட்சிக்கு ஜனநாயகத்தின்பாலோ, அல்லது சோஷலிஸத்தின்பாலோ நேர்மையான பற்று ஏற்பட்டுள்ளதா என்பதுதான் கேள்வி. ஜனநாயக சோஷலிஸ வாரம் கொண்டாடும் காங்கிரஸ்காரர்கள் முதலில் இந்தக் கேள்வியை தங்களிடமே கேட்டுக் கொள்ளவேண்டும்!

### அவசர நிலைப் பிரகடனமும் ஆள் தூக்கிச் சட்டமும ஜனநாயகமா?

ஜனநாயகத்தில் காங்கிரசுக்கு உண்மையில் பற்று இருக்குமானால்—சென்ற காலத்தில் கேரளத்தில் கம்யூனிஸ்ட் மந்திரி சபையை அகற்றியது போன்ற பல நிகழ்ச்சிகளை நாங்கள் குறிப்பிடவில்லை—இன்று நம் கண் முன்னாலேயே நிகழ்ந்துக்கொண்டிருக்கும் ஜனநாயக விரோத நிகழ்ச்சிகளைப் பற்றி என்ன பதில் கூறுவார்கள் என்று வினவுகிறோம். நீதிமன்றத்தில் சட்டப்படி விசாரணை செய்து தண்டிக்கக்கூடிய பல்வேறு சட்டங்கள் இருந்த போதிலும் அந்தச் சட்டங்களைப் பயன்படுத்தாது — ஜனநாயக [illegible]கு வதி முறைகளுக்கே நேர் விரோதமான பாதுகாப்புச் சட்டத்தைப் பயன்படுத்துவது ஏன்? பயன்படுத்தி எதிர்க் கட்சிகளை குறிப்பாக கம்யூனிஸ்ட் கட்சியினரை எல்லைப் பிரச்சினையைப் பயன்படுத்திக்கொண்டு விசாரணை இல்லாமல் சிறையில் வைத்துப் பழிவாங்குவது ஏன்?

''மிகப் பெரும் ஜனநாயக நாடென்று காங்கிரஸ்காரர்களால் போற்றப்படும் இங்கிலாந்து நாட்டில் கடுமையான யுத்தம் நடந்துக்கொண்டிருந்த காலத்தில்கூட அரசாங்கத்தின் எதிரிகளை எந்தச் சமயத்திலும் விசாரணையின்றி பாதுகாப்புக் கைதிகளாகச் சிறையில் வைத்தது என்பது இல்லையே!

முதலாளித்துவ ஜனநாயகத்திற்கே வழிகாட்டியாக விளங்கும் பிரான்ஸ் நாட்டில்கூட கம்யூனிஸ்டுகளையோ அல்லது வேறு எவரையோ விசாரணையின்றி பாதுகாப்புக் கைதியாக வைத்தது என்பது இல்லையே!

### துப்பாக்கிச் சூடு, தடியடி இதுதான் ஜனநாயகமா?

மேற்கூறிய முதலாளித்துவ ஜனநாயக நாடுகளிலெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சியினருக்கும் ஏனைய இடதுசாரி கட்சியினருக்கும் உள்ள உரிமைகள் சென்ற பதினேழு ஆண்டுகளில் காங்கிரஸ் கட்சித் தலைமையில் நடந்த ''இந்திய ஜனநாயக நாட்''டில் கிடைத்ததா என்பதை ஜனநாயக சோஷலிஸ வாரம் கொண்டாடும் காங்கிரஸ்காரர்களை வினவுகிறோம். எதிர் கட்சியினர் நடத்திய இயக்கங்கள் மீது எத்தனை துப்பாக்கிப் பிரயோகங்கள் என்பதற்கு கணக்குவழக்குண்டா? தடியடி தாக்குதல்கள் எத்தனை? 151-வது பிரிவின் கீழ் சிறையில் அடைத்தல், பாதுகாப்பு கைதியாக பல்லாண்டு சிறையில்

**கே. முத்தையா**

அடைத்தல், எதிர்க் கட்சியினர் என்பதற்காக பொய்க் கேசுகள் கொடுத்து வாட்டி வதக்குதல்—இவையெல்லாம் ஒரு ஜனநாயக நாட்டில் நடக்கக்கூடிய நிகழ்ச்சிகளா? ''ஜனநாயக வாரம்'' கொண்டாடும் காங்கிரஸ்காரர்களே இந்த ஜனநாயக கேலிக் கூத்தைப்பற்றி சற்று சிந்தித்துப் பாருங்கள்!

காங்கிரஸ் கட்சியின் மந்திரி சபைகள் யார் நலனை உறுதியாக பாதுகாத்துவருகிறது என்பதை பார்த்தாலே ஜனநாயகமோ சோஷலிஸமோ இன்றைய காங்கிரஸ் கட்சியின் தலைமையின்கீழ் அமுலுக்குக் கொண்டுவர முடியுமா என்பது தெளிவாகும்.

சுதந்திரம் அடைந்த காலத்திலிருந்து நாட்டை அலைக்கழித்து வரும் பெரும் பிரச்சினை உணவுப் பிரச்சினை. உணவுப் பொருள்களின் விலைவாசிகள் விஷம்போல் ஏறிக்கொண்டிருக்கின்றன. ஆறு மாதத்திற்கு முன்பு ரூ 1 விற்ற படி அரிசி இன்று 1½ ரூபாயாக விற்கிறது!

### உற்பத்தி பெருகுகிறது உணவு விலை ஏறுகிறது!

சர்க்கார் தரும் புள்ளி விவரப்படியே 1952—53ல் மொத்த உணவு விலைகளைக் குறிக்கும் எண் 100 என்றால் 1962-63ல் 122·3 ஆக உயர்ந்தது. இதே புள்ளி 1963-64ல் (இவ்வாண்டு ஜூன் மாதத்தில்) 135·6 ஆக உயர்ந்தது. ஒரே ஆண்டில் 12 புள்ளி உயர்வு. இந்த ஒரு ஆண்டில் உணவு உற்பத்தி குறையவில்லை. மாறாக, சென்ற ஆண்டு மூன்று கோடியே பத்தொன்பது லட்சம் டன் உற்பத்தியான உணவு இவ்வாண்டு மூன்று கோடியே 64 லட்சம் டன்னாக உயர்ந்துள்ளது. அதாவது ஒரே ஆண்டில் 45 லட்சம் டன் உணவு அதிக உற்பத்தியாகி இருந்தும் படி அரிசி ரூ. 1 லிருந்து ரூ. 1½ ஆக உயர்ந்துள்ளது ஏன்?

கண்ணில்லாத குருடன் கூட உண்மையைப் பார்க்க முடியும். இதன் காரணத்தை உணர முடியும். உணவு பதுக்கல்காரர்களும், பெரும் வியாபாரிகளும், பெரும் நிலச்சுவான்தார்களும் பாங்குப் பணத்தைப் பயன்படுத்திக் கொண்டு உணவை வாங்கி ஒளித்துவைத்து அதிக விலைக்கு விற்கும் பகற்கொள்ளையின் உணவுச் சூதாட்டத்தின் விளைவு இது என்பது யாவருக்கும் புரியும். ஆனால் டெல்லியில் கூடிய காங்கிரஸ் முதல் அமைச்சர்களும் உணவு மந்திரியும் செய்த முடிவு என்ன? மேற்கூறிய உணவுச் சூதாடிகளை கருவறுக்கும் நடவடிக்கைகள் ஏதாவது எடுத்தார்களா? பாங்குப் பணத்தை அவர்கள் துஷ்பிரயோகம் பண்ணுவதை தடுத்தார்களா? இல்லை. மாறாக, இன்று இருந்த அரைகுறை உணவுக் கட்டுப்பாடுகளை ரத்துசெய்து கொள்முதல் திட்டத்தையும் அடியோடு கைவிட்டு உணவுச் சூதாடிகளுக்குப் பரிபூரண சுதந்திரம் அளித்துவிட்டார்கள்! இதற்காக காங்கிரஸ் மந்திரிகளைப் போற்றிப் புகழுகின்றன வர்த்தக சபைகளும் முதலாளிகளின் சங்கங்களும்.

இப்படிப்பட்ட கொள்கையைப் பின்பற்றும் காங்கிரஸ் கட்சி சுரண்டலை ஒழித்து, சக்திக்குத் தகுந்த உழைப்பு, உழைப்புக்குத் தகுந்த ஊதியம், என்ற சமுதாய நீதி வழங்கப்போகும் சோஷலிஸ லட்சியத்தை அடையக்கூடிய எந்த நடவடிக்கையாவது எடுக்க முடியுமா? நிலப் பிரபுக்களுக்கு நண்பனாக விளங்கும் காங்கிரஸ் கட்சி சோஷலிஸத்தை அடையும் ஒரு சிறு நடவடிக்கை யாவது எடுக்கும் என்று எதிர்பார்ப்பது குதிரைக்குக் கொம்பு முளைக்குமென்று எதிர்பார்ப்பது போன்றதாகும்.

### நிலச் சீர்திருத்தச் சட்டம் கண்துடைப்பு நாடகம்

மற்றும் ஒரு உதாரணம்: எத்தனையோ நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் கொண்டுவந்துவிட்டார்கள். இவைகளினால் ஏழை நடுத்தர விவசாயிகளுக்கு ஏதாவது நன்மை உண்டா? இந்திய நாட்டில் பல சட்டங்கள் வந்தபிறகும் கூட 30 ஏக்கர் நிலத்திற்குமேல் வைத்திருக்கும் நிலச்சுவான்தார்களின் எண்ணிக்கை மொத்த நில உரிமையாளர்களின் எண்ணிக்கையில் 2·43 சதவிகிதமாகும். இவர்களுக்கு மொத்தம் உள்ள சாகுபடி நிலத்தில் 28·5 சதவிகிதம் நிலம் சொந்தமாக இருக்கிறது.

82·5 சதவிகிதம் ஏழை நடுத்தர விவசாயிகளுக்கோ மொத்தமுள்ள நிலத்தில் 27·45 சதவிகிதம்தான் சொந்தம்!

இந்த ஒரு புள்ளிவிவரத்திலிருந்தே ஒரு சிறு மைனரிட்டி கிராமப்புறத்தில் பேராதிக்கம் செலுத்துகிறது என்பதை யாவரும் தெட்டத்தெளிவாக பார்க்க முடியும். காங்கிரஸ் கட்சி சென்ற 17 ஆண்டுகளில் கொண்டுவந்த நிலச் சீர்திருத்தங்களின் பலன் என்னவென்றால் நிலப்பிரபுத்துவ அமைப்பு கிட்டத்தட்ட முன்னிருந்தபடியே அப்படியே நீடிக்கிறது என்பதுதான் இந்த நிலைமையில் 'சோஷலிஸ வாரம்' கொண்டாடுவது யாரை ஏமாற்றுவதற்காக? மேற்கூறிய நிலப் பிரபுத்துவ அமைப்பை ஒழிக்க எந்த நடவடிக்கையும் எடுக்காமல் சமதர்ம லட்சியம் பேசுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது.

சுதந்திரம் அடைந்தபிறகு இந்திய நாட்டில் தொழில் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்பதை யாரும் மறுக்கவில்லை. ஆனால் இந்தத் தொழில் வளர்ச்சி சோஷலிஸத்தை நோக்கிச் செல்லும் வளர்ச்சியா?

### தனியார் முதலீடு அதிகரிக்கிறது

1961-ம் ஆண்டில் 26 ஆயிரம் தனியார் முதலாளித்துவ கம்பெனிகள் இருந்தன. இவைகளின் மொத்த மூலதனம் 10 ஆண்டுகளுக்கு முன்பு ரூ. 749 கோடியாக இருந்தது. 1961-ல் இந்தத் தனியார் கம்பெனிகளின் மொத்த மூலதனம் ரூ. 1179 கோடியாக அதாவது 50 சதவிகிதமாக உயர்ந்துள்ளது.

இதேகாலத்தில் இந்திய முதலாளிகள் அந்நிய முதலாளிகளுடன் சேர்ந்துக்கொண்டு 1400 கூட்டு ஒப்பந்தங்கள் செய்துள்ளார்கள்! அதாவது இந்திய முதலாளிகளும் அந்நிய முதலாளிகளும் சேர்ந்துக்கொண்டு நம் நாட்டில் தொழிற்சாலைகள் ஆரம்பித்து மக்களை சுரண்டுவது கூட்டு ஒப்பந்தங்களின் நோக்கம். இத்தகைய அந்நிய முதலாளிகள் நம் நாட்டில் 1948-ம் ஆண்டில் ரூ. 250 கோடி மூலதனம் போட்டிருந்தார்கள். ஆனால் இன்றோ அது ரூ. 700 கோடி வரைக்கும் உயர்ந்துவிட்டது. இதன் மூலம் இந்த நாட்டின் செல்வம் ஒவ்வொரு ஆண்டும் ரூ. 100 கோடி வீதம் லாபமாக வெளிநாடுகளுக்குக் கொண்டுசெல்லப்படுகிறது.

எல்லா தொழில்களையும் கணக்கெடுத்தால் நம் நாட்டில் இன்று ரூ. 3000 கோடி வரைக்கும் உள்ள மூலதனம் தனிப்பட்ட முதலாளிகளின் மூலதனமாகும்; இவைகளில் டாட்டாவுக்கும் பிர்லாவுக்கும் மட்டும் சொந்தமான மூலதனம் ரூ. 600 கோடியாகும்.

### பொதுத் துறை தனியார் வளர்ச்சிக்கு துணை செய்கிறது!

அரசாங்கத்திற்குச் சொந்தமான தொழில்கள் 1951-ல் ரூ. 26·3 கோடி மூலதனமாக இருந்து 1961-ல் ரூ. 545·2 கோடியாக உயர்ந்தபோதிலும் இந்த உயர்வு தனியார் மூலதனத்தின்மேல் ஆதிக்கம் செலுத்தும் விதத்தில் இல்லை. மாறாக, தனிப்பட்ட ஏகபோக முதலாளிகள்

(4-ம் பக்கம் பார்க்க)

# உண்மைக்கு முன்னால் அம்பலப்பட்டு நிற்கும் கலைப்புவாதிகளின் ஆத்திரம்!

## மற்றவர்கள் பேரில் சேற்றைப் பூசும் அவதூறுப் பிரச்சாரம்!

தீக்கதிர் பத்திரிகை 30-5-64வ இதழில் நான் கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கத்தில் நடை பெற்றுவரும் ஜனநாயக விரோத, தொழிலாளர் விரோதப் போக்குகளையும் அதை எதிர்த்து தொழிலாளிகள் போராடி வருவதையும் விளக்கி கட்டுரை எழுதியிருந்ததை கண்டதும் அச்சங்கத்தின் முழுநேர ஊழியர்களில் ஒருவராகிய உண்ணி கிருஷ்ணனுக்கு கோபம் பொத்துக்கொண்டு வந்துள்ளது. ஜனசக்தி பத்திரிகை வெளியூர் 8-6-61 பதிப்பில் மூன்றும் பக்கத்தில் என்னைப்பற்றி அவதூறு பொழிந்து தன் புளுகு மூட்டை ஸ்டாக்கிலிருந்து கொஞ்சம் அவிழ்த்துக் கொட்டியுள்ளார். என்மீது தாக்குதல் நடத்த, நான் எழுதியுள்ள கட்டுரையில் கூறியவற்றுக்கு பதிலளித்து, நியாயமாக வாதாடியிருந்தால் அது நேர்மையுள்ளவர்களுக்கு அடையாளம்! பாவம்! உண்ணி கிருஷ்ணனுக்கு அது தெரியாது. வாங்கும் சம்பளத்துக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றவும் வேண்டும்.

அவருடைய ஆத்திரத்தில், என்னைத்தாக்குவதாக நினைத்து கோவை ஜில்லா ஜெனரல் எஞ்சினியரிங் அண்ட் மெக்கானிகல் தொழிற் சங்கத்தைப்பற்றி பொய்யும், புளுகும் கூறி சிறுமை படுத்த முயற்சித்துள்ளார். அச்சங்கத்துக்கு நான் தான் பொறுப்பு என்று கூறி, டெக்ஸ்டூல் கம்பெனியில் பாதிக்குமேல் தொழிலாளிகள் டெம்பரரி—பதிலி, அவர்களுக்கு தினக்கூலி ஒரு ரூபாய், 1-25 ரூபாய், வேலை நிர்ணயமில்லை, பீஸ் ரேட் முறை, அதிகமாக சம்பாதிக்கும் தொகைக்கு பிராவிடண்டு பண்டு பிடிப்பதில்லை. தீர்க்கதரிசனத்தோடு தலைமை தாங்கும் தோழருக்கு இது தெரியவில்லை. சங்கத்தின் அங்கத்தினர் எண்ணிக்கை என்ன? 1962—63ம் வருடங்களில் மகாசபை எப்படி நடந்தது? இந்த ஆண்டுக்குநடத்தப்படுமா? என்றெல்லாம் கேள்விக் கணைகளைத் தொடுத்துள்ளார்.

இச்சங்கத்தைப் பற்றியும், தொழிலைப்பற்றியும் அதிலுள்ள தொழிலாளிகள் எவ்வளவு கடுமையான சுரண்டலையும், அடக்குமுறைகளையும் எதிர்த்துப் போராடி பல வெற்றிகளை ஈட்டி மேலும் முன்னேறுவதற்காகப் போராடி வருகிறார்கள் என்பது பற்றியும் எந்த ஞானமும், அறிவும் உண்ணி கிருஷ்ணனுக்கில்லை. ஏன்? கோவை பஞ்சாலை தொழிலாளிகள் முன் காலத்தில் என்ன நிலைமையிலிருந்து எப்படி போராடி இன்றுள்ள நிலைமைக்கு வந்திருக்கிறார்கள் என்பது பற்றியே அவருக்கு வெளிச்சமில்லை! மில் தொழிலாளர் சங்கத்தில் கணக்கெழுதும் வேலைக்குக் கொண்டுவந்து உட்கார வைத்த பிறகாவது அதை அவர் பொறுமையாக கற்றிருக்க வேண்டும். அதுவுமில்லை, இனி தொழிலாளிகள்தான் அவருக்குப் பாடம் கற்றுக் கொடுக்க வேண்டும்.

### டெக்ஸ்டூல் தொழிலாளிகளின் வீரமிக்க போராட்டம்

டெக்ஸ்டூல் கம்பெனி ஆரம்பித்தது 1946-ல். அப்போது 200 தொழிலாளிகள். 1954-ல் தான் 1000 பேர்களைக் கொண்டதாகியது. 1959-ல் 3000 பேர். இப்போது சுமார் 6000 பேர்கள். இதில் 4200 பேர் நிரந்தரமாக்கப்பட்டவர்கள். 270 பேர்கள் டெம்பரரிகள். சுமார் 1500 பேர்கள் வாரக் கூலிகள். டெம்பரரிகளுக்கு ஒய்வு லீவு, பண்டிகை லீவு கேஷுவல் லீவு சம்பளத்துடன் உண்டு. பிராவிடண்ட் நிதி, போனஸ், E. S. I. திட்டம் போன்ற எல்லா உரிமைகளுமுண்டு. வாரக் கூலிகளுக்கும், E.S.I திட்டம், போன்ற உரிமைகளுண்டு. 1958 முதல் 63 அக்டோபர் முடிய சங்கத்துடன் கம்பெனி நிர்வாகம் செய்துள்ள ஒப்பந்தங்கள், கோர்ட்டுத் தீர்ப்புகள் மூலம்தான் அவை கிடைத்தது. 6000 தொழிலாளிகள் ஒன்றுபட்டு 1960 அக்டோபரில் நடத்திய மகத்தான, வீரப் போராட்டமும், டிப்பார்ட்மெண்ட் வாரியாக நடத்திய பல போராட்டங்களும்தான் வெற்றிகளைத் தந்தன. மேலும் சம்பளத்துடன் மே தினம் விடுமுறை, பண்டிகை நாள் லீவு வருடம் 10½ நாள், ஓய்வு லீவும், அதற்கு மேல் வருடம் 5 நாட்கள் கேஷுவல் லீவும் பெற்றுள்ளோம். வார சம்பளக்காரர்களும் ஓவர்டைம் செய்தால் இருமடங்கு சம்பளமுண்டு. இன்னும் பல சலுகைகளை சங்கம் பெற்றுள்ளது. இந்த வெற்றிகளை அத் தொழிலாளிகள் பெற்றுள்ளதைக் கண்டு சந்தோஷப்படவும், பாராட்டவும் உண்ணிகிருஷ்ணனுக்குத் தெரியாமல், ரமணியைத் தாக்குவதற்காக வேண்டி அவதூறுப் பிரச்சாரத்தில் இறங்கியுள்ளார். அவர் அவிழ்த்துவிட்டுள்ள புளுகு மூட்டையைப் பாருங்கள் :—

பாதிக்குமேல் தொழிலாளிகள் டெம்பரரி—பதலி, அவர்களுக்கு தினக்கூலி 1 ரூபாய், 1—25 என்றார் உண்ணி கிருஷ்ணன். 6000

**கே. ரமணி**

பேர்களில் 270 பேர்கள்தான் டெம்பரிரிகள், வாரக் கூலிகள் 1500 பேர். பதிலிகளே இல்லை. ஒரு ரூபாய் கூலி யாருக்குமில்லை. ஒரு வேலையும் தெரியாதவர்களுக்கு ஆரம்பச் சம்பளம் 1—25. மூன்று அல்லது 6 மாதத்தில் சம்பள உயர்வு கொடுப்பார்கள். இதைத்தான் மேலே கூறியபடி உண்ணிகிருஷ்ணன் புளுகியிருக்கிறார். ஆனால் 50, 60 வருடங்களுக்கு மேலாக வளர்ந்துள்ள பஞ்சாலைத் தொழிலில், 28 வருடமாக நமது சங்கம் போராடிப் பல வெற்றி கண்டு, மற்றெல்லா தொழில்களையும் விட தொழிலாளிகள் முன்னேறியும், இன்றும் மஸ்டர் ரோலில் பெயர் எழுதாமல், கார்டில்லாமல், எந்த உரிமையுமில்லாமல், தினமும் கூலி வாங்கி வேலை செய்யும் தொழிலாளிகள், அதுவும் பாதிக் கூலிக்கு வேலை செய்யும் தொழிலாளிகள் மில்களில் உள்ளனர். ஸ்பின்னருக்கு ரூ. 3/-ம், ரோவிங் மெஷின் ஓட்டுபவருக்கு ரூ. 2¼/-ம் அரியாக்காரருக்கு ரூ. 2/-ம், கிளீனிங்கேங் ஆட்களுக்கு ரூ. 1/-ம் தினக் கூலி கொடுத்து சுரண்டும் அக்ரமம் நடக்கிறது. ரமணியை குறைகூற துள்ளிக் குதிக்கும் உண்ணிகிருஷ்ணன் இதைக் கண்டு வெட்கப்பட வேண்டாமா? ஓம் பராசக்தி மில் தொழிலாளிகள் இந்த தினக் கூலி முறையை எதிர்த்துத் தானே போராடுகிறார்கள். அப் போராட்டத்தையும் கிண்டல் செய்கிறாரே உண்ணிகிருஷ்ணன். பதிலிகள், டிக்கட் இல்லாதவர்கள், மஸ்டர்ரோலில் பெயரில்லாதவர்கள் ஒரு ஆள் கிடையாதே டெக்ஸ்டூலில். பீஸ் ரேட் முறையில் வேலை செய்பவர்கள் 6000 பேர்களில் 250 பேர்கள் தான் உள்ளனர், பாவம்! உண்ணியின் கண்களுக்கு இது பாதி பேர்களாகத் தெரிகிறது. இந்த பீஸ் ரேட் முறை, வாரக் கூலி முறை மாற்றுவதற்காகத் தொடர்ந்து கிளர்ச்சி நடக்கிறது. தற்பொழுது வைக்கப்பட்டுள்ள கோரிக்கைகளில் அவை முக்கியமானவை! டெக்ஸ்டூல், சிமிண்ட் போன்ற தொழில்களில் தொழிலாளிகளுக்கு கேஷுவல் லீவு சம்பளத்துடன் கிடைக்கிறது. பஞ்சாலைகளில் கேஷுவல் லீவு கிடைப்பதில்லை. போராடிப் பெறவேண்டியுள்ளது.

அவசரக் கோலத்தில் அள்ளித் தெளிக்கும் உண்ணி கிருஷ்ணன் இதையெல்லாம் சிந்திக்கவேண்டும். சகல தொழில்களையும்விட அதிக வளர்ச்சியும், லாபமும் உள்ளபஞ்சாலைதொழில் போன்றதல்ல எஞ்சினீரிங் தொழில். அது இப்போதுதான் வளர்கிறது ஆரம்ப திசையில் உள்ள அத் தொழிலில், பஞ்சாலை தொழிலாளிக்கு கிடைக்கும் சம்பளமும் வசதியும் கிடைக்காது. அப்படியிருந்தும் அந்த தொழிலாளர்கள் போராடிப் பல வசதிகளைப் பெற்றுள்ளார்கள். அதைப்புரிய சக்தியில்லாமல், ரமணியைப் பற்றி அவதூறு செய்ய உள்ளதையும் இல்லை என்று கூறினால் உலகம் ஒப்பாது சொல்லுபவர் தான் பொய்யராவர்.

### பிராவிடண்ட் பண்ட் வசதிக்கு போராடியது யார்?

டெக்ஸ்டூல் கம்பெனியில் பிராவிடண்ட் நிதி பிடிப்பதில் குறைபாடிருந்ததைக் கண்டு பிடிக்கவில்லை, கமிஷனர் வந்து தொழிற்சங்க பிரதிநிதிகளைக் கூட்டி நடத்திய கூட்டத்துக்கும் வரவில்லை என்று உண்ணி ஒரு போடு போட்டுள்ளார் உண்மை என்ன? இந்த பிரச்சினையை நாம் முன்னமேயே பிராவிடண்ட் பண்ட் இன்ஸ்பெக்டருக்கு நேரில் தெரிவித்திருந்தோம். அதற்கு பிறகுதான் கமிஷனர் வந்து பார்வையிட்டார். அவர் கூட்டிய கூட்டத்துக்கு நம் சங்கத்துக்கு அழைப்பு வரவில்லை. அதனால்தான் நாம் கலந்து கொள்ள முடியவில்லை. அந்தப் பிரச்சினை இன்னும் தீராமல் தகராறு நடந்துக் கொண்டிருக்கிறது. அதற்காக உண்ணி கிருஷ்ணன் தீர்க்கதரிசியாகவும், நாங்கள் அறிவற்றவர்களாகவும் ஆகப்போவதில்லை, இதுவரை டெக்ஸ்டூல், பி. எஸ். ஜி., ராம கிருஷ்ணா, டி. பி. எப்., சுப்பையா, டெக்ஸ்மோ போன்ற பெரிய கம்பெனிகளிலும், மற்றும் 30க்கு மேற்பட்ட பவுண்டரிகளிலும் நமது சங்கம்போராடித் தான் சம்பள உயர்வும், மற்ற வசதிகளும் பெற்றுள்ளோம். உண்ணி கிருஷ்ணன் புரட்சி நடத்தியல்ல! நம்மை "புரட்சி வாதிகள்" என்று உண்ணி கிண்டல் செய்கிறார். அதை ஏற்றுக் கொள்கிறோம். தொழிலாளி வர்க்க புரட்சிப் பாதையை நாம் கைவிடவில்லை. உண்ணிகிருஷ்

(6-ம் பக்கம் பார்க்க)

3-ம் பக்கத் தொடர்ச்சி

## ஜனநாயக சோஷலிஸம்...

அரசாங்க தொழில்களை பயன் படுத்திக்கொண்டு மேலும் வளரவே, இன்று அந்தப் பொதுத் துறை தொழில்கள் பயன்படுகின்றன. இதற்குத் துணை செய்வது தனிப்பட்ட முதலாளிகள் கையிலுள்ள பாங்குகள். இன்று 39·97 கோடி மதிப்புள்ள மூலதனம் போட்டுள்ள தனிப்பட்ட முதலாளிகளின் பாங்குகளில் ரூ. 2,226 கோடி 'டெபாசிட்' தொகை உள்ளது. இந்த 'டெபாசிட்' பணம் பெரும்பாலும் சாதாரண நடுத்தர மக்கள் போட்ட பணமாகும். இந்தப் பாங்கு டெபாசிட் பணம் நம் நாட்டிலுள்ள 44 நபர்கள் கையில் சிக்கியுள்ளது. இவர்கள்தான் பெரும் புள்ளிகள்! மொத்தமுள்ள 4,174 டைரக்டர் பதவிகளில் 2,000 டைரக்டர் பதவிகள் மேற்கூறிய 44 பெரு முதலாளிகள் கையில் உள்ளன. இதை வைத்துக் கொண்டு இவர்கள் சகல பாங்குகளிலும் ஆதிக்கம் செலுத்துகிறார்கள்; சகல தொழில்களிலும் ஆதிக்கம் செலுத்துகிறார்கள். அரசாங்க தொழில்களிலும் ஆதிக்கம் செலுத்துகிறார்கள்; அரசாங்கத்தின்மீதே ஆதிக்கம் செலுத்துகிறார்கள்; காங்கிரஸ் கட்சியிலும் ஆதிக்கம் செலுத்துகிறார்கள். இவர்களுக்கு எதிராக தன் சுண்டுவிரலை கூட காங்கிரஸ் கட்சி அசைக்க முடியாத நிலையில் சோஷலிஸம் பற்றி வானளாவப் பேசிப் பயன் என்ன? இந்தப் பக்காசூர முதலாளிகளின் ஆதிக்கத்தையும் சுரண்டலையும் ஒழிப்பதற்கான நடவடிக்கை எடுக்காத நிலையில் சோஷலிஸம் பேசுவது வெறும் மக்களை ஏமாற்றச் செய்யும் வெத்துவேட்டு பிரச்சாரமாகத் தான் இருக்கும்.

# ஈட்டி முனை

## அற்ப சந்தோஷம்

கல்யாண வீட்டில் சீப்பைத் திருடி ஒளித்துவைத்துவிட்டு இந்தக் கல்யாணம் நடக்காது செய்து விட்டேன் பார் என்றானும் ஒரு 'அறிவாளி'. இந்த 'அறிவாளி' ரகத்தைச் சேர்ந்தவர்கள் தமிழ் நாட்டு திரிபுவாதிகளின் தினத் தாளை நடத்தும் பேர்வழிகள்!

''வெற்றி! வெற்றி! நமக்குப் பிரமாத வெற்றி! கேரளத்தில் பிளவுவாதிகளுக்கு தேர்தலில் போட்டியிட கதிர் அரிவாள் சின்னம் கிடைக்கவில்லை. அவர்களுக்குத் தோல்வி! படுதோல்வி! ஆஹா! ஊஹூ.. ஹிஹி...'' என்று எக்காளமிட்டு கேலி செய்யும் விதத்தில் தமிழகத் திரிபுவாதத் தினத்தாள் செய்தி ஒன்று வெளியிட்டது. ஒரு நாள் வெளியிட்டதுடன் நின்றால், ஏதோ அற்ப சந்தோஷம் என்று நல்லோர்கள் எண்ணிக்கொண்டு போயிருப்பர். ஆனால் திரிபுவாதிகள் இரண்டு மூன்று நாள் தொடர்ந்து அந்த ஏட்டில் கட்டம் கட்டி வெளியிட்டார்கள்! குதூகலித்தார்கள்! அர்த்த ராத்திரியிலேயே குடை பிடித்தார்கள்! மழை எதுவுமில்லை. இரவில் குடை பிடித்துக்கொண்டு கும்மாளமடித்தார்கள்!

இந்தக் குறுகிய காலக் குதூகலிப்பு, திருவனந்தபுரம் தேர்தல் முடிவு வந்த நிமிடத்திலிருந்து அடியோடு மாறியது. அவர்கள் முகாம் சோகக் காட்சியாயிற்று! கதிர் அரிவாள் சின்னம் பெற்ற திரிபுவாதிகள் படு கேவலமாகத் தோல்வி கண்டார்கள் என்ற செய்தியைக்கூட அவர்கள் வெளியிடவில்லை. பூனை கண்ணை மூடிக்கொண்டு உலகமே இருண்டுவிட்டதென்று நினைத்ததாம்! அவர்களது ஏட்டில் இந்தச் செய்தி வெளிவராவிட்டால் தமிழக மக்களுக்கே விஷயம்தெரியாமல்போய்விடும் என்று நினைத்தார்கள் போலும்! ஒருக்கால் திருவனந்தபுரம் தந்த அடியில் அவர்களது மூளை குழம்பிப்போய் விட்டதோ என்னவோ! அவர்கள் பத்திரிகையில் செய்தி வெளியிடாவிட்டால், உண்மை இந்த நாட்டிற்குத் தெரியாமலா போய் விடும்! ஏனைய தினத்தாள்களெல்லாம் உண்மைகளை வெளியிட்டு அவர்களது மானத்தை வாங்கி விட்டன.

மார்க்ஸீய ஞானமில்லாத, வர்க்க போதமற்ற குட்டி பூர்ஷ்வாக்கள் இந்தத் திரிபுவாதிகள். இவர்களுக்கு ஒரு சிறு வெற்றி கிடைத்தால் போதும்! கோபுரத்தின் உச்சிக்கு சென்றுவிடுவார்கள்! தோல்வி கண்டால் கண்ணை மூடிக்கொண்டு குப்புற வீழ்வார்கள். லெனின் இந்தக் குட்டி பூர்ஷ்வாக்களைப் பற்றி வெகு நன்றாக எழுதியிருக்கிறார். இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்குத் தாண்டுவதில் வெகு சமர்த்தர்கள் இவர்கள்! 1948-ல் புர்...ர்...ட்சி செய்தசூரப்புலிகள் இந்தத் தமிழ்நாட்டுத் திரிபுவாதிகள்! அதில் தோல்வி கண்டு 10 ஆண்டுகளுக்குமேல் சோர்ந்து கிடந்தனர்; இருந்த இடந் தெரியாமல் இருந்தனர். எல்லைப் பிரச்சினை தோன்றியது, திடீரென்று குதித்து எழுந்தனர். கட்சி யந்திரத்தைக் கைப்பற்றிக்கொண்டு கிலி பிடித்துப்போய் பூர்ஷ்வா வர்க்கத்திடம் சரணாகதி அடைந்தனர். திடீர் புர்...ர்...ர...சி! திடீர் சரணாகதி! இதுதான் திரிபுவாதிகள்!

கதிர் அரிவாள் சின்னம் கிடைக்காவிடில் டாங்கே கோஷ்டியை எதிர்க்கும் உண்மையான கம்யூனிஸ்டுகள் வெற்றியடையமாட்டார்கள் என்பது அவர்களது கணிப்பு. பரிதாபம்! பரிதாபம்! ஏமாற்றமடைந்தனர். இதுவரையில் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்த உண்மையான மார்க்ஸிய-லெனினிய வாதிகள் மட்டுமே திரிபுவாதிகளை எதிர்த்துப் போராடினர். இன்று நிலைமை மேலும் வளர்ச்சியடைந்து குண மாறுதலும் ஏற்பட்டுள்ளது. திரிபுவாதத்தை முறியடிக்கும் அறப்போரில் பொதுமக்களும் பங்குகொள்ள முன்வந்திருப்பதையே திருவனந்தபுரம் தேர்தல் எடுத்துக் காட்டுகிறது. மக்களது கோபத்திலிருந்து யாரும் தப்ப முடியாது. திரிபுவாதிகளும் விதிவிலக்கல்ல.

★ ★ ★

உண்மையான மார்க்ஸிஸ்டுகளை ''பிளவுவாதிகள்'' என்று நாமகரணம் செய்தது டாங்கே கோஷ்டி. யார் உண்மையான பிளவு வாதிகள் என்பது நாள் ஆக ஆக மக்களுக்கு தெளிவாகி வருகிறது!

இந்தியப் பாராளுமன்றத்தில் தனிப்பெரும் எதிர்க்கட்சியாகத் திகழ்ந்தது கம்யூனிஸ்ட் கட்சி! அதன் தலைவனாக இருந்தார் தோழர் ஏ. கே. கோபாலன். இவர்மீது நெற்றிக் கண்களைத் திறந்தது டாங்கே கோஷ்டி! என்னுடைய இரண்டு கண்கள் போனாலும் பரவாயில்லை. என் எதிரிக்கு நிச்சயமாக ஒரு கண் போயாகவேண்டும் என்று முடிவு செய்தது டாங்கே கோஷ்டி. பாராளுமன்ற எதிர்கட்சித் தலைமைப் பொறுப்பிலிருந்து ஏ.கே. கோபாலனை அகற்ற முடிவு செய்தது டாங்கே கோஷ்டி. விளைவு பார்லிமெண்ட் கட்சியில் பிளவு. இன்று இரு பிரிவுகளுக்கும் எதிர்க் கட்சியின் பிரதான ஸ்தானம் இல்லாமல் போய்விடும் நிலைமை! இது டாங்கேயின் சிருஷ்டி.

அதேபோல் ஆந்திரப் பிரதேச சட்டசபையில் ஐக்கிய ஜனநாயக முன்னணி என்ற பெயரில் கம்யூனிஸ்டுகளும் ஏனைய முற்போக்காளர்களும் பிரதான முன்னணி எதிர்க் கட்சியாகவிளங்கினர்கள். அதன் தலைவர் யாவரின் நன்மதிப்பையும் பெற்று விளங்கிய கம்யூனிஸ்ட் இயக்கத்தின் பழம்பெரும் தலைவர் தோழர் சுந்தரய்யா! அவர்மீது தம் நெற்றிக் கண்களைத் திறந்தது டாங்கே கோஷ்டி. அவசர அவசரமாக சட்டசபை ஐக்கிய முன்னணியைக் கூட்டினர். தமக்குள்ள தற்காலிக மெஜாரிட்டியைப் பயன்படுத்தி சுந்தரய்யாவைத் தலைவர் பதவியிலிருந்து அகற்றினர். குறைந்தபட்சம் எதிர்கட்சிக்கு 30 பேர் தேவை. யார் யாரையோ பிடித்து கையெழுத்து வாங்கினர். பில்லலமேரி வெங்கடேஸ்வரலுவைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். இதற்குச் சபாநாயகரும் எதிர்க்கட்சி என்று அங்கீகாரம் தந்துவிட்டார்!

மீதமுள்ள 20 கம்யூனிஸ்டுகளும் இனி என்ன செய்வார்கள் என்று தோழர் நாகி ரெட்டியிடம் கேட்டனர் பத்திரிகையாளர். பில்லலமேரி தலைமையிலுள்ளது கொள்கையற்ற பலபட்டறை ஐக்கிய ஜனநாயக முன்னணி. நாங்கள் 20 பேரும் கம்யூனிஸ்ட் எதிர்க் கட்சியாக செயல்படுவோம் என்றார். குளிக்கப் போய் சேற்றைப் பூசிக்கொண்டது போலிருக்கிறது ஆந்திர திரிபுவாதிகளின் இன்றைய நிலை.

★ ★ ★

கதிர் அரிவாள் சின்னம்—சட்டசபைக்கு தேர்ந்தெடுத்த கம்யூனிஸ்டுகளில் திரிபுவாதிகளுக்கு மெஜாரிட்டி — இதையெல்லாம் காட்டி கம்யூனிஸ்ட் கட்சியின் மார்க்ஸிஸ-லெனினிஸக் கொள்கையைக் குழிதோண்டிப் புதைத்துவிடலாம் என்பது திரிபுவாதிகளின் கனவு.

கதிர்அரிவாள் சின்னத்தை மட்டும் கொண்டு ஊரை ஏமாற்ற முடியாது! இது திருவனந்தபுரம் தீர்ப்பு.

சட்டசபை மெஜாரிட்டியைக் காட்டி மிரட்டுவதற்கும் அதே கதிதான். தேர்தல் நடந்து நமது தோழர்கள் வெற்றி பெற்றது 1962-ல். திரிபுவாதம் தோன்றி கட்சியை அலைக்கழிப்பது 1964ல்! இதைப்பற்றி மக்கள் தீர்ப்புக் கூறப்போவது 1967-ல்! ஏன்... அதற்கு முன்பே தெளிவானாலும் ஆகும்! எனவே திரிபுவாதிகளே அவசரப்படாதீர்! அர்த்த ராத்திரியில் குடை பிடிக்காதீர்! அதே திருவனந்தபுரம் அடி சீக்கிரமே எங்கும் கிடைக்கும்!

—கே. எம்

# நெல்லை மாவட்டத்தில் தோழர் சங்கரய்யா சுற்றுப்பயணம்

28-6-64ம் தேதி அன்று கோவில்பட்டித் தாலுக்காவில் விளாத்திக்குளம் வட்டார விவசாயிகள் மாநாடு தியாகி சீனிவாசராவ் பந்தலில் நடைபெற்றது. பிரதிநிதிகள் கூட்டத்தில் 17 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. குறிப்பாக, விளாத்திக்குளம் பிர்க்காவை பஞ்சப் பிரதேசமாகப் பிரகடனப்படுத்தக் கோரியும், விவசாய உற்பத்தி பொருட்களுக்கு நியாயவிலை நிர்ணயிக்கக் கோரியும், பஞ்சத்தால் பாதிக்கப்பட்ட விளாத்திக்குளம் விவசாயிகளுக்கு குறைந்த வட்டியில் நீண்ட காலத் தவணையில் கடன் கொடுக்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. மகாநாட்டை ஒட்டி மாட்டு வண்டி ஓட்டப் பந்தயம் நடத்தப்பட்டது. சுமார் பத்தாயிரம் மக்கள் ஓட்டப் பந்தயத்தைப்பார்வையிட்டனர்.

பின்னர் கம்யூனிஸ்ட் அனுதாபிகள் ஆதரவாளர்கள் குடியேறியிருக்கும் சிதம்பர நகர் காலனியை தோழர் என். சங்கரய்யா அவர்கள் திறந்து வைத்தார்.

மாலையில் மாநாட்டுப் பொதுக் கூட்டம் விவசாய சங்கத்தலைவர் ராமலிங்க ரெட்டியார் தலைமையில் நடைபெற்றது. பிரதிநிதிகள் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை விளக்கி தோழர்கள் சந்தன மாரியப்பனும், பாலவிநாயகமும் விளக்கி பேசினர்கள். பிறகு தோழர் சங்கரய்யா தற்பொழுது கம்யூனிஸ்ட் கட்சியில் டாங்கே கோஷ்டியினர் விவசாயிகளுக்குப்பாடு படாமல் விவசாய மக்களை கடன் தொல்லைக்கும் வறுமைக்கும் அழைத்துச் செல்லும் காங்கிரஸ் கட்சிக்கு வால் பிடிப்பதையும் பலவிபரங்களுடன் தெளிவுபடுத்தினர். சக்திவாய்ந்த விவசாய சங்கங்களை கட்டும்படியும் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை அமுலுக்கு கொண்டு வர உறுதியான போராட்டங்களை நடத்தும்படி விவசாயிகளுக்கு அறைகூவல் விடுத்தார். விவசாயி மக்களின் நியாயமான கோரிக்கைகளுக்கும், அக்கோரிக்கைகளை அடைய அவர்கள் நடத்தும் போராட்டத்திற்கும் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுதியான ஆதரவையும் தெரிவித்தார்.

29-6-64ல் காலை கோவில்பட்டியில் கட்சி அங்கத்தினர், நெருங்கிய அனுதாபிகள் கூட்டம் நடைபெற்றது. நகரஇணைப் புக்குழு செயலாளர் தோழர் எஸ். வள்ளிநாயகம் தலைமை வகித்தார். 70 தோழர்கள் கலந்துகொண்டனர். தோழர் சங்கரய்யா தற்பொழுது கட்சியில் டாங்கே கோஷ்டியினர் மார்க்ஸியத்தைப் புரட்டி, திருத்தல் வாதப்போக்கை பின்பற்றுவதை பல்வேறு விவரங்களுடன் குறிப்பிட்டார் பாலவிநாயகம் மாவட்டத்தில் டாங்கே கோஷ்டி கரைந்து வருவதை விவரித்தார்,

அன்று மாலையில், சங்கரன் கோவில் தாலுக்கா சிவகிரியில் எம். பாண்டியன் தலைமையில் நடைபெற்ற 5000 பேர் கொண்ட பொதுக்கூட்டத்தில் தோழர்கள். பாலவிநாயகம் என். சங்கரய்யா ஆகியோர் பேசினர்கள். காங்கிரஸ் ஆட்சியில் விவசாயிகள், பொதுமக்களின் நிலைமை மோசமாகி வருவதையும், கடந்த 17 ஆண்டுகள் முதலாளிகள் 3000 கோடி ரூபாய் சொத்து சேர்த்திருப்பதையும், மற்றும் ஏகபோக முதலாளித்துவத்தை திட்டமிட்டு வளர்த்துக் கொண்டே அதை சோஷியலிஸம் என்று மக்களை ஏய்ப்பதையும் எடுத்துக் கூறி, இப்படிப்பட்ட காங்கிரசுக்கு டாங்கே கோஷ்டி வால் பிடிப்பதையும் தெளிவாக விளக்கிக் கூறி டாங்கே கோஷ்டியை நிராகரிக்கும்படி சிவகிரி கட்சித் தோழர்களுக்கும், பொது மக்களுக்கும் வேண்டுகோள் விடுத்தார்.

# எத்திசை நோக்கி இந்திய அரசு செல்கிறது?

இரான் தேசத்திற்கு அருகாமையில் உள்ள கடலின் கீழ் எண்ணெய் வளம் இருப்பதாகக் கருதப்படுகிறது. இந்த எண்ணெய் வளத்தை தோண்டி எடுத்துப் பயன்படுத்தி லாபம் சம்பாதிப்பதற்கு அமெரிக்காவில் உள்ள 'பிலிப்ஸ் பெட்ரோலியம் கம்பெனியும்' இத்தாலியின் அரசாங்கத்துறைக்குச் சொந்தமான ஈ. என். ஐ. என்ற பெரும் எண்ணெய்க் கம்பெனியும் திட்டமிட்டுள்ளன. இதற்காக வேண்டி இந்த இரண்டு கம்பெனிகளும் சேர்ந்துகூட்டாக ஈரான் அரசாங்கத்திற்கு அனுமதி கேட்டு மனுப்போட்டிருக்கின்றன.

இதில் புதுமை என்னவென்றால், இந்த ஏற்பாட்டில், இந்தியாவை ஒரு பங்காளியாகச் சேர்த்துக் கொள்ள மேற்படி இரண்டு கம்பெனிகளும் முன்வந்துள்ளன. இந்த ஏற்பாடு வெற்றியடைந்தால், ஒரு அன்னிய நாட்டிற்குச் சென்று எண்ணெய் உற்பத்தி தொழிலில் இந்தியா ஈடுபடும் படலம் ஆரம்பமாகுமென்று 'இந்து' பத்திரிக்கையில் 5-7-64 ம் தேதியிட்ட இதழில் வெளிவந்துள்ள செய்தி அறிவித்துள்ளது. முதலாளித்துவக் கம்பெனிகளில் ஒன்றான பிலிப்ஸ் பெட்ரோலியம் நிறுவனத்துடன் இதாலி தேசத்தின் அரசாங்க ஏகபோக முதலாளித்துவ நிறுவனமான ஈ. என். ஐ. கம்பெனியுடனும் கூட்டு சேரப்போகிறது இந்தியா. ஆசிய-ஆப்ரிக்க நாடுகளில் ஒன்றான ஈரானின் எண்ணெய் வளங்களைச் சுரண்டி லாபம் சம்பாதிக்கும் புனிதமான பணியில் அமெரிக்க. இத்தாலிய ஏகபோக கம்பெனிகளுடன் கூட்டு சேர்ந்து பங்காளியாக இந்தியா செயல்படப் போவதாகத் தெரிகிறது.

இந்த கூட்டு ஏற்பாட்டின்படி உற்பத்தியாகும் குருட் ஆயில் (சுத்திகரிக்கப்படாத எண்ணெய்யில் மூன்றில் ஒரு பகுதி இந்தியாவிற்கு கிடைக்குமாம். இந்தியாவின் பங்காக ஆண்டொன்றுக்கு 30 லட்சம் டன் எண்ணெய் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. பிலிப்ஸ் கம்பெனியும், இத்தாலியக் கம்பெனியும் கூட்டாகச் சமர்ப்பித்துள்ள மனு ஈரான் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருந்து வருகிறது. ஈரான் அரசாங்கத்தின் முடிவு சாதகமானதாக இருக்குமென்று டெல்லி அதிகார வட்டாரங்கள் நம்பிக்கை கொண்டிருக்கின்றன என்று அறிவிக்கப்படுகிறது.

மேலை நாட்டு ஏகபோக முதலாளித்துவக் கம்பெனிகளுடன் கூட்டு சேர்ந்து, இதர நாடுகளின் வளங்களைச் சுரண்டுவதில் இந்தியப் பெரும் முதலாளித்துவமும், அதன் பிடிப்பில் உள்ள அரசும் அடியெடுத்து வைக்க ஆரம்பித்திருக்கின்றன என்பதை இந்தச் செய்தி எடுத்துக் காட்டுகிறது.

4-ம் பக்கத் தொடர்ச்சி

# எங்களைப்பற்றி பேச உங்களுக்கு தகுதி உண்டா?

ணனும், அவருடையதிரிபுவாதத் தலைவர்களும் புரட்சியைக் கைவிட்ட ''எதிர்ப்புரட்சிக்காரர்''கள் என்பதை நாம் பூரணமாக ஒப்புகிறோம்.

எஞ்சினீயரிங் தொழிற் சங்கத்தின் மகாசபை கூட்டம் சென்ற வருடம் நடந்ததா? இந்த வருடம் நடக்குமா? எப்படி நடந்தது? என்றெல்லாம் புதிர்போட்டுள்ளார் உண்ணி. சென்ற வருட மகாசபை நன்றாக நடந்தது. இவ்வருடமும் சிறப்பாக நடக்க உள்ளது. எப்படி நடக்க வேண்டுமென்பதை தொழிலாளிகளும் ஊழியர்களும் திர்மானிக்கிறார்கள். உண்ணி கிருஷ்ணனுக்கு இதில் ஏற்பட்டுள்ள கவலை என்ன? மில் தொழிலாளர் சங்கத் தலைமையில் உள்ள பொறுப்பாளிகள், சங்க விதிகளை மீறி, கிளை மகாசபைகளை நடத்தாமல், சேர வந்த மெம்பர்களை சேர்க்காமல் கிளைகளைக்கலைத்து, ஊழியர்களை நீக்கி, கேள்வி கேட்டவர்களைத் துரத்தி, நிர்வாக கமிட்டியில் ஒரு தொழிலாளிகூட இல்லாத அற்புதத்தை சிருஷ்டித்து, சங்கத்தின் உயர்ந்த ஸ்தாபன அமைப்பாகிய பொது கவுன்சிலின் தேர்தலை சென்ற மகாசபையிலிருந்து இன்றுவரை 11 மாதகாலமாகப் பூர்த்தி செய்யாமல் சில அங்கத்தினர்கள் இல்லாமலே நடத்தி வந்து, சங்கச்சட்டத்தை கேலிக் கூத்தாக்கி, நெருக்கடியை சிருஷ்டித்து, தொழிலாளிகள் உருவாக்கிய சங்கத்தை தலைவர்கள் கலைத்துத் தள்ளும் நிலைமை எஞ்சினீயரிங் சங்கத்திலோ, மற்றெந்த சங்கத்திலுமே இல்லை. கலைப்புவாதிகளின் ஜோதியில் கலந்து நிற்கும் உண்ணிக்கு கேள்வி கேட்க வேண்டிய இடம் புரியவில்லை.

### உன்னையே நீ அறிந்துகொள்!

கடைசியாக, ''இத்தனை சங்கங்களிலும் ஒருவர் தன் பொறுப்பை எப்படி நிறைவேற்ற முடியும்?'' என்று அங்கலாய்ப்போடு கேட்டுள்ளார். என்னுடைய வாழ்க்கையில் லட்சியமே-பதவி அதுவும் காரியதரிசி-அதற்காக எந்தக் காரியத்திலும் துணிந்து செயல்படுவார் என்று தனது அறிவுச்சுடரின் பிரகாசத்தை வீசியுள்ளார். ஒருவர் எத்தனை சங்கங்களில் பொறுப்பை நிறைவேற்ற முடியும் என்பதற்கு விடைப்பெறச் சுலபமான வழி, அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் தலைமைப் பதவியிலிருந்து வால்பாறை மலை வரையில் உள்ள சங்கங்களின் பதவிகளை மாலையாகத் தொகுத்து கழுத்திலணிந்துள்ள, உண்ணியின் எஜமானர்களைக் கேட்டால் தெரியும். நான் பதவியிலிருப்பது இரண்டு, மூன்று சங்கங்களில் தான், அதிலும் பிரதான காரியதரிசிப் பதவியில் நானிருக்கவுமில்லை. தொழிலாளிகள் விரும்பி பதவியிலிருத்தினால் ஒருவருக்கு சக்தியிருந்தால் இருப்பது தப்பல்ல விரும்பாதவர்கள் ஒட்டிக் கொண்டிருப்பது தப்பு, வேறு பாதையில் உண்ணி கிருஷ்ணன் பாதையில் அல்லவா சென்றிருக்க வேண்டும்? தொழிலாளி வர்க்கம் வேண்டாம் என்று கூறினாலும். கம்யூனிஸ்ட் கட்சிப் பிரதிநிதிகள் கழித்துக்கட்டி விட்டாலும், மோட்டார் காருக்காக ஒரு பதவி, மொத்தமுள்ளதில் நமக்கு எப்படியும் ஒரு பதவி என்று பதவி வேட்டைக்காரர்களின் மத்தியிலே பழகிவரும் உண்ணிக்கு பார்ப்பவர்களையெல்லாம் பதவி வேட்டைக்காரர்களாகப்படுவதில் ஆச்சரியமில்லை. யாரை எந்தப் பதவியில், எப்படி வைப்பதென்பதையறிந்துள்ள தொழிலாளி வர்க்கம் உண்ணி கிருஷ்ணனைப் போன்றோர்க்கு பதிலளிக்கும்! உண்மைகள் எல்லாம் அதில் பிரதிபலிக்கும்.

# பழிவாங்கும் போக்கை எதிர்த்து சென்னை ஓட்டல் தொழிலாளர்கள் போராட்டம்!

சென்ற சில நாட்களாக சென்னையில்உள்ளபல ஹோட்டல்முதலாளிகள் உரிமைக்காகப் போராடும் தொழிலாளர்களை பழிவாங்கும் முறையில் தொழிலாளர்களை வேலையை விட்டு நீக்குவது, அடிப்பது, உதைப்பது போன்ற அராஜக நடவடிக்கைகளில் இறங்கி வருகின்றனர். முதலாளிகளின் இந்த மோசமான செயல்களுக்கு சென்னை நகர போலீஸார் உடந்தையாயிருந்து தொழிலாளர்களை வெளியேற்றுதல், அடித்து துன்புறுத்துதல் போன்ற மோசமான நடவடிக்கைகளில் தொடர்ச்சியாக ஈடுபட்டு வருகின்றனர், ஆனால் இந்த பயமுறுத்தல்களுக்கெல்லாம் ஹோட்டல் தொழிலாளர்கள் பணிந்து விடமாட்டார்கள், தொடர்ந்து போராடி வருகிறார்கள்.

சென்ற மாதம் சுங்குவார்சத்திரம் விசாலாட்சிபவன் என்ற ஓட்டலில் அதன் உரிமையாளர் திடீரென்று சட்ட விரோதமாக எந்த முன்னறிவிப்பும் இன்றி இரவோடு இரவாக ஓட்டலை கதவடைப்புச் செய்தார். மறுநாள் காலையில் சுங்குவார் சத்திரமே கண்டிராத அளவிற்கு நூற்றுக்கணக்கான இரும்பு தொப்பி அணிந்த போலீசார் தொழிலாளர்களை பலாத்காரமான முறையில் வெளியேற்றியதின் மூலம் மேற்படி விசாலாக்ஷி பவன் முதலாளிக்கு பாதுகாப்பு கொடுத்தனர். சட்டத்தை பகிரங்கமாக மீறும் முதலாளிகட்கு பாதுகாப்பு அளிப்பது ஒன்றுதான் போலீசாரினதும், அரசினதும் பணி கீழ்வரும் சம்பவங்கள் வெட்ட வெளிச்சமாக்குகின்றது.

### ஓட்டல் பாலஸ்

''அமைந்தகரை, ஓட்டல் பாலஸில் பணி புரிந்து வந்த மங்கம்மாள் என்ற 55 வயது பெண் தொழிலாளி உட்பட்ட 15 தொழிலாளர்களை கைது செய்தது ஏன்? கடந்த ஆறு மாதகாலமாக தங்களுக்கு அளிக்கப்பட்டிருந்த சம்பளத்தில் பாதிக்கு அதிகமாக வெட்டப்பட்டதை எதிர்த்து தொழிலாளர் சங்கம் மூலமாக தங்களது கோரிக்கைகளை நிர்வாகத்திடம் சமர்ப்பித்தும் லேபர் ஆபீசரைவிட்டு நியாயம் வழங்க கோரியும் போராடி வந்தனர். ஆனால் நிர்வாகம், லேபர் ஆபீசரின் ஆலோசனைகளைப் புறக்கணித்தது மட்டுமின்றி, கோரிக்கைகள் பற்றி பேச்சு வார்த்தை நடத்தப்பட்டு தொழிற் தகராறு சட்டம், 32 ஐ என்ற பிரிவை மீறி தொழிலாளர்களை பழிவாங்கினர் ஏற்கனவே நிர்வாகத்தின் அடக்கு முறைகளால் ஆத்திரமுற்ற தொழிலாளர்கள் முறையாக நோட்டீஸ் அளித்து வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர் வேலை நிறுத்தம் மிகவும் அமைதியான முறையில் நடைபெற்றுக்கொண்டு இருந்தது.

நிர்வாகம் தனது கருங்காலிகளை வைத்து தொழிலாளர்களை ஆத்திரமூட்டக்கூடிய பல வேலைகளில் ஈடுபட்டது. தொழிலாளர்கள், சங்கத்தின் ஆலோசனைப்படி ஆத்திரமூட்டலுக்கு இரையாகாமல் அமைதியை காத்து வந்தனர்.

இந்நிலையில் திடீரென எவ்வித குற்றமுமற்ற தொழிலாளர்களை மங்கம்மா என்ற 55 வயது மாது உட்பட 15 பேர்களை போலீசார் கைது செய்தனர். அது மட்டுமன்றி பல பொய் வழக்குகளை ஜோடித்தும் உள்ளனர். போலீஸ் நிலையத்தில் தொழிலாளர்களை ஜாமீனில் விடவும் மறுத்தனர். ரிமாண்டில் உள்ள தொழிலாளர்களை சித்திரவதை செய்தும் மிருகத்தனமான முறையில் நடத்தியும் வருகிறார்கள்,

### குப்தாஸ் ஸ்டேட் ஹோட்டல்

குப்தாஸ் ஸ்டேட்ஸ் ஓட்டல் தொழிலாளர்கள் மேற்படி நிர்வாகத்தினர்களில் ஒருவர் ஒரு தொழிலாளியை, பூட்ஸ் காலால் மனிதத்தன்மையற்று உதைத்ததை கண்டித்து தங்களது கண்டனத்தை அமைதியான முறையில் தெரிவித்தனர் மேற்படி நிர்வாகி தவறுக்கு வருந்தினால், தொழிலாளர்கள் வேலை செய்ய தயாரானார்கள். நிர்வாகம் வேலையளிக்க மறுத்து ஓட்டலை கதவடைப்பு செய்திருக்கின்றனர். இதை கண்டித்து தொழிலாளர்கள் போராடி வரும் நேரத்தில் போலீஸார் நிர்வாகத்துடன் சேர்ந்து 50 போராட்ட தொழிலாளர்களை பலாத்காரமாக வெளியேற்றியுள்ளனர், ஹோட்டல் நிர்வாகம் போலீஸ் பாதுகாப்புடன் ஓட்டலை திறந்து வியாபாரம்

(7-ம் பக்கம் பார்க்க)

2-ம் பக்கத் தொடர்ச்சி

# முதலமைச்சர் மாநாட்டின் முடிவு சொல்லளவில் மட்டுமே

தானிய மொத்த வியாபாரத்தை நடத்தாது. தானியக் குபேரர்களின்சுரண்டல்களுக்கு மக்களைத் தொடர்ந்து விட்டு வைக்கும். பெரிய நிலச்சுவான்தார்களிடம் கொள்முதல் என்பது கிடையாது. தானியச் சேமிப்புகளுடன் மக்களின் வாழ்க்கையை பணயம் வைத்தாடும் வர்த்தகச் சூதாடிகள் காங்கிரஸ் சர்க்காரை வானளாவப் புகழத் தவற மாட்டார்கள். அன்னிய நாட்டுச் செலாவணியைப் பற்றி அடிக்கடி அறிக்கைகளில் கவலை தெரிவிக்கும் அரசாங்கம் அமெரிக்காவிலிருந்து அரிசியை இறக்குமதி செய்ய யோசிப்பதில்லை. மேலும் மேலும் அமெரிக்கா போன்ற ஏகாதிபத்திய நாடுகளையே நமது உணவு தானியத் தேவைகளுக்கு சார்ந்து நிற்கும் திசையில் நாம் இழுத்துச் செல்லப்படுவதையும் இதில் காணலாம்.

முதலமைச்சர்கள் மாநாட்டு முடிவுகளும் திரு. சி. சுப்ரமணியம் அவர்கள் வெளியிட்டு வரும் கருத்துக்களும் ''சுதந்திரா'' கட்சியின் கருத்துக்களை நெருங்கி நிற்பதையும் இன்று காண முடிகிறது. அண்மையில் திரு. என். ஜி. ரங்கா தலைமையில் பம்பாயில் கூடிய ''சுதந்திரா'' கட்சியின் பொதுக்குழு தீர்மானத்தில் பின்வரும் பகுதியுடன் ஒப்பிட்டுப் பாருங்கள்.

''உணவு தானிய மொத்த வியாபாரத்தை சர்க்கார் நடத்துவதற்கும் விவசாயிகளிடம் கட்டாயக் கொள்முதல் செய்வதற்கும் முன் வைக்கப்படும் ஆலோசனைகளை எதிர்த்து பொதுக்குழு நாட்டை எச்சரிக்கிறது. கண்ட்ரோல்கள் தோல்வியுற்றுள்ளன என்பது வெள்ளிடைமலை. விலைவாசிகளை கண்ட்ரோல் செய்யாமலும், தானிய நடமாட்டத்தைக் கட்டுப்படுத்தாமலும் கட்டாயக் கொள்முதலைக் கைவிடாமலும் உள்ள ஒரு திட்டமின்றி, வேறு எந்த ஆலோசனையும் திருப்தி அளிக்காது'' (ஹிந்து, ஜூலை 1.)

இவ்வளவு அனுசரணையாக நடந்து கொள்ளும் அரசாங்கத்தின் உணவமைச்சர், தவறு செய்யும் வியாபாரிகள் மீது மிகக் கடுமையான நடவடிக்கை எடுப்பேன் என்று கூறியதைக் கண்டு எந்த வர்த்தகச் சூதாடி பயப்படப்போகிறான்? கடந்த 17 வருடங்களாக மக்களுக்கு விரோதமாகச் செயல்படும் சுரண்டல் பேர்வழிகள் விஷயத்தில்' அரசாங்கத்தின் நடை முறை என்ன என்று அவர்களுக்குத் தெரியாதா? அமெரிக்காவிடமிருந்து கிடைக்கப்போகிற 4 லட்சம் டன் உணவுத் தானியக் கையிருப்புடன் மார்க்கெட்டில் தீவிரமாக இறங்கி விலையைக் கட்டுப்படுத்திவிடுவோம் என்ற மிரட்டலுக்கும் உணவு தானிய மொத்த வியாபாரிகள் தங்களுக்குள் நகைத்துக்கொண்டு தானே இருப்பார்கள்.

ஜூலை 5-ம் தேதியிட்ட 'துணிகள் விலைவாசி' சம்பந்தமாக வெளிவந்துள்ள ஒரு முக்கிய செய்தியைப் பார்த்தாலும்—சர்க்காரின் விலைவாசிக் கொள்கை யாருக்காகச் செய்யப்படுகிறது. யாரை ஆதாரமாகக் கொண்டுள்ளது என்பதைத் தெளிவாகப் பார்க்கலாம். மில்களின் துணி உற்பத்தியில் 30 சதவிகிதம் சர்க்காருக்கு விற்கப்பட்டு நியாய விலைக் கடைகளுக்குப் போகுமென்றும், இந்த அளவுக்கு ஒரு கண்ட்ரோல் திட்டம் ஜூலை 7ந் தேதி பம்பாயில் வர்த்தக மந்திரி மனுபாய்ஷா தலைமையில் கூடும் நெசவாலை ஆலோசனைக் கமிட்டி கூட்டத்தில் அறிவிக்கப்படும் என்று கூறிவிட்டு, அச்செய்தியின் இறுதிப் பாராவைப் பாருங்கள்.

### முதலமைச்சர்கள் மாநாட்டிற்குப் பின் விலைவாசிகள் உயருகின்றன!

முதலமைச்சர்கள் மாநாட்டிற்குப் பிறகும் மொத்த வியாபாரத்தில் விலைவாசிகள் சிறிது குறைந்ததாகக் காட்டிக்கொள்ளப்பட்டதேதவிர இந்த விலைக்கு யாரும் வாங்கியதாகவோ, சில்லறைவிலைகள் குறைந்ததாகவோ விபரம் ஏதும் வெளிவரவில்லை. அதற்கு மாறாக ஜூலை 6-ந் தேதி ஹிந்து பத்திரிகை மதுரை நிருபர் செய்திப்படி ''கொள்முதல் உடனே நிறுத்தப்படுமென்ற அறிவிப்பு, வாங்கி சாப்பிடுவர்களுக்கு ஒரு நலனும் அளிக்கவில்லை. மொத்த வியாபாரத்தின் விலைக்குறைவு சில்லரை வியாபாரத்திற்கு எட்டவில்லை. சர்க்கார் அறிவிப்புக்கு முன்பு என்ன விலை கொடுத்தார்களோ அதே விலையைத்தான் இப்பொழுதும் உபயோகிப்போர் கொடுக்கவேண்டியிருக்கிறது. இதுதான் மதுரையிலும் விருதுநகரிலும் நிலை. உண்மையில் சிவகாசியிலும், சாத்தூரிலும் விலைகள் சிறிது உயர்ந்தும் இருக்கின்றன. ('ஹிந்து' ஜூலை 6)

சென்னை நகரத்தில் முக்கியமான ஒரு சில்லறை வியாபார ஸ்தாபனமான திருவல்லிக்கேணி அர்பன் கூட்டுறவு சொசைட்டியில் விசாரித்ததில் அரிசி விலை குறையவில்லை என்று தெரிகிறது என்று நிருபர்செய்தி. ('ஹிந்து' ஜூலை 6)

''உணவு விலைவாசிகள் பம்பாயில் உயருகின்றன'' என்ற தலைப்புடன் விலைவாசி விவரங்களை, ஜூலை 3-ந் தேதி செய்தியாக 'ஹிந்து' வெளியிட்டுள்ளது. ('ஹிந்து' ஜூலை 4),

எனவே சர்க்கார் நடவடிக்கைகளின் தன்மையிலிருந்தும் சரி இன்று நிலவும் விலைவாசி நிலவரங்களிலிருந்தும் சரி, மக்களுக்கு அபிவிருத்தி இல்லை என்பது தெளிவு. அவதிப்படும் மக்களுக்கு சீக்கிரம் உண்மையான நிவாரணமளித்தாக வேண்டுமென்பதை சர்க்கார் கவனிப்பதாக இல்லை.

ஆனால் விலைவாசி உயர்வினால் நாளுக்கு நாள் மென்மேலும் அவதிப்பட்டு வரும் மக்கள், இந்த நிலையிலிருந்து மீள வழி கண்டு தானாகவேண்டும். உணவு தானிய மொத்த வியாபாரத்தை சர்க்கார் உறுதியாக மேற்கொண்டு பொறுப்புடன் லஞ்ச லாவண்யங்களுக்கு இடமின்றி நடத்தியாக வேண்டும். போதுமான உணவு தானியங்களை விவசாயிகட்கு நியாயமான விலையைக் கொடுத்துக் கொள்முதல் செய்யவேண்டும். அதிக நிலமுள்ள நிலச்சுவான்தார்களிடம் கட்டாயக்கொள்முதல் அவசியம் சாதாரண விவசாயிகளை எவ்விதத்திலும் கொள்முதல் என்ற பெயரால் துன்புறுத்துவதை அனுமதிக்கக் கூடாது. போதிய நியாய விலைக்கடைகளில் மலிவான விலையில் மக்களுக்கு உணவு கிட்டியாக வேண்டும். இதற்கான ஏற்பாடுகளுக்கும் அதிகாரிகளையும் அதிகார வர்க்கத்தையும் நம்பிச் செயல்படும் போக்கை விடுத்து மக்களையும் மக்களின் ஸ்தாபனங்களையும் ஆதாரமாகக்கொண்டு சர்க்கார் செயல்படுவதே பிரச்சினைத்துக் தீர்வு காட்டும். இவற்றிற்காக மக்கள் மென்மேலும் ஒன்றுபட்டுக் குரலெழுப்பிப் போராட முன் வரவேண்டும். இது எந்த ஒரு தனிக்கட்சியின் பிரச்சினையுமல்ல, எல்லாப்பகுதி மக்களையும் பாதிக்கும் பிரச்சினை மிக விரிவான மக்களின் இயக்க ஒற்றுமை இதில் சாத்தியமல்ல. அத்தகைய ஒரு வளர்ச்சி தான் சர்க்காரின் இன்றைய போக்கை மாற்றி மக்களுக்கு உகந்த உருப்படியான விலைவாசிக் குறைப்பு நடவடிக்கைகளை அமுலுக்குக் கொண்டுவர உதவும்.

8-ம் பக்கத் தொடர்ச்சி

சட்டத்தை பயன்படுத்தி ஏராளமான கம்யூனிஸ்டுகளையும் தொழிற் சங்கத் தலைவர்களையும் ஜனநாயகத்திற்கு எதிராக கைது செய்தற்காக நேரு இவரை விலக்கினார் என்று அப்பத்திரிகை எழுதியது. ஆனால் இன்று அவர்கள் என்ன சொல்லுகிறார்கள்? நேருவின் கொள்கையை உறுதியாகக் கடைப்பிடிக்கும் சிறப்பான தலைவர் சாஸ்திரிஜி தான் என்று வர்ணிக்கிறார்கள்; பிற்போக்குப் பிண்டம முற்போக்கு மனிதனாக மாறிய விந்தையைப் பாருங்கள்.

சோவியத் கம்யூனிஸ்ட் ஏடு நேருவின் உண்மையான வாரிசு சாஸ்திரி என்று கூறிய பின் சாஸ்திரியின் தலைமையில் இந்திய ஒற்றுமையும் முன்னேற்றமும் உறுதி என்று டாங்கே பேசுவதில் ஆச்சரியம் என்ன இருக்க முடியும்?

மொரார்ஜிக்கு பதிலாக முந்திரா புகழ் டி. டி. கே. நிதியமைச்சராக நியமிக்கப்பட்டபோது டி. டி. கே. ஓர் மிதவாத சோஷலிஸ்ட் என்று புகழ் பாடின இதே நபர்கள் இன்று ''நிதி இலாகா'' பிற்போக்கான நபரிடம் சிக்கியிருக்கிறது என்று எழுதியிருக்கிறார்கள். அண்மையில் நடைபெற்ற முதலமைச்சர்கள் மாநாட்டில் ''உணவுத் துறையில் அரசாங்க வர்த்தகம் நடைபெற வேண்டுமென்று'' டி. டி. கே. வலியுறுத்தியதை யொட்டி இந்த நண்பர்கள் டி. டி. கே. முற்போக்காளராக மாறி விட்டாரென்று ஒரு வேளை எழுதினாலும் வியப்படைவதற்கில்லை! மொரார்ஜி வழியில் டி. டி. கே. என்று ''தீக்கதிர்'' அன்று எழுதியதை கிண்டல் செய்து மொரார்ஜியின் பிற்போக்கான பொருளாதார கொள்கைகளை திரு. டி. டி. கே. திருத்துவார் என்று பகிரங்கமாக பேசியவர்கள் இன்று என்ன சொல்வார்களோ?

வர்க்க அடிப்படையில் இயங்கும் அரசின் தன்மையை தனிநபர்களின் குணாதிசயங்களைக்கொண்டு அளந்துபார்க்கும் இவர்களின் ''மார்க்ஸிய ஞானத்தை''ப்பற்றி என்ன சொல்லுவது?

6-ம் பக்கத் தொடர்ச்சி

## நியூராக்ஸி கேப் கதவடைப்பு

நடத்திவருகிறது. 50 தொழிலாளர்கள் வேலையின்றி பட்டினியுடன் போராடி வருகிறார்கள். சட்டத்தை மீறும் முதலாளிக்கு போலீஸ் பாதுகாப்பு; நியாயத்திற்கு போராடும் தொழிலாளிக்கு கிடைக்கும் பரிசு பலாத்கார வெளியேற்றம், பட்டினி, வேலையில்லாமை.

புரசைவாக்கம் நியூராக்ஸி கேப் தொழிலாளர்கள் கடந்த 1 மாதமாக பழிவாங்கலை எதிர்த்து போராடிவருகின்றனர். அரசாங்கம் இதை பற்றி எந்த வித அக்கரையும் செலுத்தாமல் நாளதுவரை தட்டி கழித்து வருகிறது. மேற்படி முதலாளி 30-6-64 இரவு 11 மணிக்குமேல் ஓட்டலில் படுத்து தூங்கிக் கொண்டிருந்த எல்லா தொழிலாளிகளையும் போலீஸ் உதவியுடன் மிரட்டி வெளியேற்றினர். இரவில் ஓட்டலில் பூட்டு போடப்பட்டது போலீஸ் உதவியுடன் 60தொழிலாளர்கள் வேலையின்றி தெருவில் தள்ளப்பட்டனர். 60 தொழிலாளர் குடும்பங்கள் தெருவில்நிற்கிறது. ஆகபோலீஸ் நிர்வாகமும், அரசாங்கமும் தொடர்ந்து தொழிலாளர்களின் போராட்டத்தை நசுக்க ஓட்டல் முதலாளிகளுடன் கூட்டு சேர்ந்து செயல் பட்டு வருவார்களேயாயின் தொழிலாளர்கள் போராடிப் பெற்ற தங்கள் உரிமைகளை பாதுகாத்துக் கொள்ள பெரும் போராட்டம் நடத்த தயங்க மாட்டார்கள். தொழிலாளர்களின் உரிமைகளை பாதுகாக்க வேண்டிய அரசு, முதலாளிகளுடன்சேர்ந்து அடக்கு முறைகளை ஏவிவிடுவதால் தொழிலாளர்களின் போராட்டம் மேலும் கூர்மையாகத்தான் உதவுமேயொழிய பிரச்னைக்கு பரிகாரம் காண உதவாது. காலங்கடந்தாவது அரசு இதை உணருமா?

—''டி. கணேசன்''

# -: குறிப்புகள் :-

—பி. தேவராஜ்—

## ✻ காமராஜர் பிறந்ததின விழா
## ✻ உண்ணாவிரதம் காட்டுவதென்ன?
## ✻ ஓராயிரம் கெய்ரோன்களில் ஒரு கெய்ரோன்
## ✻ 'பிற்போக்கு' சாஸ்திரிக்கு 'பிராவ்தா'வின் புகழ்மாலை

காங்கிரஸ் தலைவர் திரு காமராஜரின் பிறந்த தின விழாவை 'ஜனநாயக சோஷலிஸ' வாரமாகக் கொண்டாட விமரிசையான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. காங்கிரஸ் தலைவர்களும், திருவாளர்கள் சம்பத், ஏ.எஸ்.கே. ஐயங்கார், பாலதண்டாயுதம், மோகன் குமாரமங்கலம் போன்றவர்கள் விழாக் குழுவில் அங்கம் வகிக்கிறார்கள்.

தனது முழு மூச்சையும் சோஷலிஸத்திற்கெதிராகப் பயன்படுத்துவதே பிறவி லட்சியமாகக்கொண்ட திரு எஸ்.கே. பட்டீல்தான் இந்த விழாவையொட்டி நடைபெறும் 'ஜனநாயக சோஷலிஸ' பிரச்சார வாரத்தின் முக்கிய பேச்சாளர். கூட்டுச்சேராக் கொள்கையும், பாங்குகளைத் தேசியமயமாக்கும் கோரிக்கையையும் மிகக் கடுமையாகத் தாக்குவதையே திருப்பணியாகக் கொண்ட பூதான வேஷதாரி ஜெயப்பிரகாஷ் மற்றொரு முக்கிய பேச்சாளர். உணவு தானிய வியாபாரத்தை அரசாங்கம் ஏற்கக்கூடாதென்று வாதாடும் உணவு மந்திரி சி. சுப்ரமணியம், உண்ணாவிரதம் இருப்பதே ஜனநாயகத்திற்குப் புறம்பானது என்று பேசி, பணம் கொடுக்க வசதியில்லையேல் பஸ்ஸில் பிரயாணம் செய்யவேண்டாம்என்று புதிய 'ஜனநாயக' உபதேசம் செய்யும் முதலமைச்சர் திரு பக்தவத்சலம், தேச விடுதலை இயக்கத்தின் அருகில்கூட வந்தறியாத 'தேசிய அணித்' தலைவர் திரு. இ.வி.கே சம்பத், நேருவின் பாதையைப் பின்பற்றுவதே சோஷலிஸத்துக்கான வழி என்று கூறி நாட்டு முதலாளிகளுக்கு ஒத்து ஊதும் திருவாளர்கள் மோகன் குமாரமங்கலம், பாலதண்டாயுதம், ஏ. எஸ். கே. ஐயங்கார்...... ஜனநாயக சோஷலிஸத்தைக் கொண்டாடும் பேரணியில் இடம் பெற்றிருக்கும் விசித்திரத்தைப் பாரீர்!

காங்கிரஸின்ஏகபோக ஆட்சியைப் பாதுகாக்க யாரையும் விலைகொடுத்து வாங்கத் தயங்காத, எந்த முறையையும் கையாளத் தயங்காத தலைவரின் பிறந்தநாளைக் கொண்டாட இனம் இனத்தோடு கூடும் காட்சியைப் பாரீர்!

* * *

சென்னை நகரத்தில் அநியாயமாக, உயர்த்தப்பட்டுள்ள பஸ் கட்டணத்தைக் கண்டனம் செய்யாதாரில்லை. கட்டணத்தைக் குறைக்கக் கோரி, பாலதண்டாயுதம், முருகேசன் தலைமையில் கடந்த 10 நாட்களாக உண்ணாவிரதம் நடைபெற்றது. அரசாங்கம் அவர்களைக் கைதுசெய்து தற்கொலைக்கு முயன்றதாக குற்றமும் காட்டியுள்ளது. காந்தியடிகளும், பகவத்சிங்கும், ஜதீன்தாசும், ஏனைய தலைவர்களும் உரிமைக்காக உண்ணாவிரதம் இருந்தபோது வெள்ளை ஏகாதிபத்தியமே செய்யத் துணியாத காரியத்தை இன்று அவர்களின் தியாகத்தின் பயனாக ஏற்பட்ட ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்துகொண்டுள்ள அமைச்சர்கள் செய்கின்றனர். கட்டணம் கொடுக்க வசதியில்லாவிட்டால் பஸ்ஸில் ஏறவேண்டாம் என்று முதலமைச்சர் பேசுகிறார். இன்று இப்படிப் பேசிய அமைச்சர் நாளை அரிசி விலை அதிகமென்றால், உணவு அருந்தவேண்டியதில்லை என்று கூறமாட்டாரா?

ஏழைகளின் பாஷை புரியாத மாடி வாசிகள் இவர்கள். வலுவான மக்கள் இயக்கத்தின் குரல்தான் இவர்களுக்குப் புரியும் போலும்!

பேசுவது ஜனநாயக சோஷலிஸம்; நடைமுறையோ பகற்கொள்ளை. உண்ணாவிரதம் முடிந்துவிட்டது. ஆனால் முதலமைச்சரின் பேச்சும், அரசாங்கத்தின் போக்கும் ஒரு படிப்பினையைத் தருகிறது. ஆளும் வர்க்கம் அனுஷ்டிக்கும் மக்கள் விரோதக் கொள்கையை முறியடிக்க மக்களின் பலத்த இயக்கத்தால்தான் முடியும் என்பதே அது. நெருக்கடி காலத்தில் ஆட்சியாளர்களுக்கு பெரும் உதவி செய்தவர்களாக இருந்தாலும், மக்களின் உரிமைக்காக வாதாடும்போது அரசாங்கம அதை அனுமதிக்காது என்பதையும் இது எடுத்துக்காட்டுகிறது.

ஓயாமல் ஆட்சியாளர்களிடம் 'முற்போக்கை' காண முயலுவோர்கள் உண்மையைப் பார்ப்பார்களா? தமிழக காங்கிரசில் முற்போக்கான திருத்தம் ஏற்பட்டுவிட்டதென்றும் நமது மாநில அரசு முற்போக்குடையது என்றும் மேட்டுப்பாளையத்தில் தீர்மானம் நிறைவேற்றியவர்கள் என்ன சொல்வார்களோ?

* * *

கெய்ரோன் பஞ்சாப் முதலமைச்சர் பதவியிலிருந்து விலக்கப்பட்டுள்ளார். திரு. நந்தா இதைச் சுட்டிக்காட்டி மார்தட்டிக்கொள்கிறார். ஆனால் கெய்ரோன் விவகாரத்தின் வரலாறு பல உண்மைகளையும் அம்பலப்படுத்துகிறது. தேபர் விசாரணையின் மூலம் கெய்ரோனைப் பாதுகாக்க காங்கிரஸ் தலைமை விசாரணைக்கு முயன்றது. எதிர்கட்சிகள் கெய்ரோன் ராஜினாமா செய்ய வேண்டும் என்று கோரியதை காங்கிரஸ் தலைமை நிராகரித்தது.

"கெய்ரோன் நல்லவர்" "அவரை ராஜினாமா செய்ய வேண்டியதில்லை" என்று நேருவே பகிரங்கமாக கெய்ரோனுக்கு ஆதரவளித்தார். அதிகாரத்தை ஆட்சியாளர்கள் ஆளும் கட்சிக்காகவும் பெரும் முதலாளிகளுக்காகவும் சுயநலத்துக்கும் எவ்வாறு பயன்படுத்துகிறார்கள் என்பதற்கு கெய்ரோன் விவகாரம் ஒரு எடுத்துக்காட்டு. இன்னும் எத்தனை கெய்ரோன்கள் கதராடைக்குள்ளும் அரியாசனங்களிலும் புகுந்திருக்கிறார்களோ? அவர்களின் திருவிளையாடல்கள் என்று அம்பலத்துக்கு வருமோ?

பதினேழாண்டுகளாக காங்கிரஸ் ஆட்சி அனுஷ்டித்த கொள்கைகள் பெரும் முதலாளிகளுக்கு ஏராளமான செல்வத்தைத திரட்ட வசதி செய்துள்ளது. நாட்டின் பொருளாதார அமைப்பிலும், அரசியல அமைப்பிலும் இவர்களுக்கு வலுவான பிடிப்பு உண்டு. இந்த செல்வாக்கை மேலும் தங்களை வலுப்படுத்துக் கொள்ள அவர்கள் பயன்படுத்துகிறார்கள். அதன் விளைவாகவே லஞ்சம் தலைவிரித்தாடுகிறது. லஞ்சத்தை ஒழிக்க கங்கணம் கட்டிக்கொண்டிருப்பதாக மார்தட்டிப் பேசும் திரு. நந்தா அவர்கள் இதைப் பார்க்க மறுக்கிறார்.

காங்கிரஸ் அரசாங்கத்தின் இன்றைய கொள்கை கள்ளப் பணம் அதிக அளவில் பெருகுவதற்கே வழிசெய்கிறது. அதோடு அந்நிய ஏகபோகங்களுடன்சேர்ந்துகொண்டு நாட்டைச் சுரண்டல் காடாக்கும் பணியைச் செய்ய இந்தக் கருப்பு பணக்காரர்களுக்கு அரசாங்கம் வழி செய்கிறது. சில சமயங்களில் உள்நாட்டு அரசாங்கங்கள் தங்கள்நாட்டு பணக்காரர்களின் நலன்களுக்கெதிராக ஏதாவது செய்ய நினைத்தால்கூட போதும்! உடனே இந்த 'அந்நிய ஏகபோக நண்பர்கள்' தங்களுடைய உள்நாட்டு நண்பர்களின் நலன்களுக்கு விரோதமாகச் சென்றால் அந்தந்த அரசாங்கங்களுக்கு "கடன், உதவி" முதலியவைகள் கிடைக்காதுஎன பயமுறுத்தி பணியவைப்பார்கள்.

ஓர் உதாரணம் :—புவனேஸ்வரக் காங்கிரஸ் கூட்டத்தில் பாங்குகளை தேசியமயமாக்கக் கோரும் தீர்மானம் வரவிடாமல் செய்தது. இந்தக் கள்ளப் பணத்தைக்கொண்டு ஏகபோக முதலாளிகள் மந்திரி சபைகளையோ, பாராளுமன்றத்தையோ தங்கள் செல்வாக்கின் கீழ் வைக்க அரசாங்கத்தின் போக்கு உதவுகிறது. அரசாங்கத்தின் இக்கொள்கையின் விளைவாக கள்ளப் பணம் வைத்திருப்பவர்கள்தான் நாட்டின் உண்மையான ஆட்சியாளராக மாறிவருகிறார்கள் என்பது மறுக்க முடியாத ஒன்று.

மிக உயர்ந்த நிலையிலிருப்பதும் கட்டுப்படுத்தப்படாததுமான இந்திய ஏகபோக முதலாளிகளின் அதிகாரம்தான் உண்மையில் நாட்டில் பெரும் அளவில் லஞ்சலாவண்யங்களைவளர்த்துவருகிறது. ஏகபோகங்களின் இந்த பயங்கரவளர்ச்சியைததடுத்து நிறுத்தாமல் லஞ்சத்தை ஒழிக்க முடியாது. டால்மியா, ஜெயின் மோசடிகளைப்பற்றிய விவியன்போஸ் அறிக்கை, முந்திரா மோசடியைப்பற்றிய சாக்ளா அறிக்கை முதலியவைகள் சரிவர ஆராயப்படாமலே தள்ளப்பட்டுவிட்டது.

இந்தச் சூழ்நிலையில் கெய்ரோனின் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டு கெய்ரோனும் அவரது கூட்டாளிகளும் நீதிமன்றத்தின் முன் கொண்டுவரப்பட்டு விசாரிக்கப்படுவார்களா அல்லது காங்கிரஸ் கட்சியின் "வழக்கப்படி" கெய்ரோனுக்கு வேறொரு பதவி கொடுக்கப்படுமா என்பதுதான் மக்கள் கேட்கும் கேள்வி.

* * *

காமராஜ் திட்டம் அமுலாக்கப்பட்டபோது திரு. லால் பகதூர்சாஸ்திரி மத்திய அமைச்சரவையிலிருந்து வெளியேறினார். முற்போக்கும் பிற்போக்கும எப்படி இருக்கிறது என்று ஆருடம் பார்ப்பவர்கள் விளக்கம் கூறினார்கள். சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் வார ஏடான "நியூ டைம்ஸும்" விளக்கம் தர முன் வந்தது அவசர காலச்

(7-ம் பக்கம் பார்க்க)

Edited and Published by Sri M. N. Ravunni, 2, Alandoor Road, Saidapet Madras-15.
Printed by Sri A. N. Sathyanarayanan, Geetha Printing Works, 4, Hospital Road, Saidapet, Madras-15.